தொ-கரு.] பிங்கள ஹு புரட்டாசிமீ [பகுதி-கக.
l. XV. September—October, 1917. No. 11.

# கடைச்சங்ககாலம்.

கடைச்சங்ககாலம் கி. பி. 2-ம் நூற்றாண்டென்றும், 5-ம் நூற்றாண்டென்றும், 8-ம் நூற்றாண்டென்றும் பலர் பலவிதம் கூறுவர். இவ்வ...த்தில் உண்மை யாதெனஆராய்வோம்.

சடைச்சங்கத்திறுதிக்...தில் அசோகன்காலத்தில் (கி. மு. 250) தென்இந்தியாவிற்கு

புத்தசமயம் தமிழகத்தில் பிரபலமாய்வழங்கிற்றென்று மண...லை கூறும்.

உத்தரன்விசித்திரன்உருத்திரன்பைரவன்
சித்திரன்சிங்கன் தனுத்தரன்சிவேதன் (Silap XXVI 182-3)
ஆரியவரசரைச் செங்குட்டுவன்வென்றான். இவர்களில் ஒருவ...து கி. பி. 125-க்குமுன் ஆரியநாட்டில
ஆண்டதாகத்தெரியவில்லை. ...ல் கி. பி. 127-160ல் ஆண்ட
உருத்திரதாமன் என்ற சகவரசன் ...குட்டுவன்வென்ற உருத்திரனேபோலும். கி. பி. 40-75ல் இயற்றப்...ற Periplus (T. R. A.

வற்படி (நசக ²ஊன்டிய வரகுணமங்கல ஈனையுடு Tn ,u 897)
நம்மா ழ்வா ர பாடுவதா ன், ஆதித்தசோழன் (கி. பி. 880-907)
காலத்திலேயே நம்மாழ்வா ர்காரணப்பெயரான சடகோபன்
மன்றது ஸாதாரணஜனங் - ளுக்கும் பெயராய்வழங்கிவந்ததாலும்,
(இசசெய்தி ஒரு சாஸனதத்திற்காரணப்
படுவதாகக் கோபிநாதராயரவர்கள் எனக்கு அன்புடன
தெரிவித்தனர்) கடை . . சசகாலம் ருசுக
நம்மாழ்வா ர்காலம் கி. பி. 9-ம் நூற்றாண்டின் பிற்பகுதியெனவே
நிர் ணயிக்கப்படும். நச்சினார்க்கினிய ர்
'பின்னுள்ளோர்செய்தசிந்தாமணி' எ ன் று ம்
'வஞ்சிப்பொய்யாமொழிபுரம்வமைய முகாட்சிந்திருந்தகு முனிவன்'
என்றும் எ ழுதியிருப்பதா லும், பொய்யாமொழிப்புலவர் ஒரு
தமிழ்ச்சங்கத்தைத்கூட்டுவிக்கமுயன்றாரென்று தெரிதலாலும், பொ
ய்யாமொழியின்சங்கத்தையே நம்மாழ்வா ரழித்தனரென்றும், அச்
சங்கத்திலேயே ஜீவகசிந்தாமணி
அரங்கேற்றப்பெற்றதென்றும், கடைச்சங்ககாலத்துக்குப்பின்னரே
சிந்தாமணி இயற்றப்பெற்றதென்றும் கருதத்தகும். ஸ்ரீமான் மல.
மு. ஸ்வாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் சிந்தாமணியின்காலத்தைத்
தக்ககாரணங்களால் சுமார் கி. பி. 814 என்று
நிர்ணயித்திருப்பதால், கடைச்சங்கம் கி. பி. 8-ம் நூற்றாண்டில்
அல்லது அதற்குமுன்னரோ கடைசி முடிந்திருக்கவேண்டும்.
திருமங்கையாழ்வாரும் 'சங்கத்தமிழ்' என்றும 'சங்கமுத்தமிழ்'
என்றும் சில விடங்களிற்கூறுவதால், கி. பி. 750-க்கு முன்னமே
கடைச்சங்கமிருந்த தென்று தெளியலாகும். (See Tamil
திருமங்கையாழ்வார்காலம் IV p. p. 60-9.)

ஸ்ரீமான் மு. இராகவையங்காரவர்கள் தமது 'சேரன்செங்குட்டுவன்' என்னும் நூலிற் கடைச்சங்ககாலம் கி. பி. 5-ம் நூற்றாண்டென ஸ்தாபிக்கமுயன்றார்கள். இம் முடிபு தவறென்பதை ஸ்ரீமான் K.S. ஸ்ரீநிவாஸபிள்ளையவர்கள் தெளிவாயும் விரிவாயும் காட்டியிருக்கின்றனர் (Sen Tamil XV pp. 3-24). அவர்களாற் சொல்லப்படாத சில விஷயங்களை மட்டும் எடுத்துக்காட்டுகின்றேன்.

கி. பி. 6-வது, 7-வது நூற்றாண்டுகளிற் பிரபலமாயிருந்த பல்லவர்களைப்பற்றி யாதொன்றுஞ் சங்க நூல்களிற் கூறப்படாமையாலே, அவர்களது பிராபல்யத்திற்கு முன்னதாகக் கடைச்சங்கம் நிகழ்ந்திருக்க வேண்டுமென்பது ஐயங்காரவர்களது அபிப்பிராயம். இது யாவருக்கும் உடன்பாடே. ஆனால் கி. பி. 5-ம் நூற்றாண்டிற்றான் அது நிகழ்ந்திருக்கவேண்டுமென்றறிய நியாயமில்லை. அக்காலம் கீழெல்லைமட்டுமேயாகும். கரிகாலனுக்குப்பின் நெடுமுடிக்கிள்ளியும், அவனுக்குப்பின் அவன்றம்பி நலங்கிள்ளியும், நலங்கிள்ளிக்குப்பின் நெடுமுடிக்கிள்ளியின் மகன் தொண்டைமான் இளந்திரையனும் ஆண்டனர். புகாரிலாண்ட கரிகாலன் (பட்டினப்பாலை 285; கலிங்கத்துப்பரணி VIII 20-1; [illegible] சிலப் V; மணி I 39-40) மாதவிக்குத் தலைவரிசைகொடுத்தவனாயினும் (சிலப் XV 21-2) அவன் பகைவரை வெல்ல வடதிசைசென்றதைப் பழையசெய்தியாகக் கூறப்படுதலானும் (சிலப் V 89-104; அதற்கு அடியார்க்குநல்லார் உரை: மணி I 39-40),

வெற்றிவேற்செழியன், கொங்கிளங்கோசர், கயவாகு, பெருங்கிள்ளி முதலான அரசரைக் கூறுமிடத்து, கரிகாலனைமட்டும் இளங்கோவடிகள் கூறாததாலும் (சிலப் உரைபெறுகட்டுரை), செங்குட்டுவனுக்கு முந்தின தலைமுறையில் அவனிருந்திருக்கவேண்டும். கரிகாலனுக்குப்பின் புகாரையாண்ட (மணி XXIV 25-9) நெடுமுடிக்கிள்ளியும் அவன் தம்பியும் காரியாற்றில் வென்றனர். (மணி XIX 125-7). அப்போரிற் செங்குட்டுவனது அம்மான் நெடுங்கிள்ளி தஞ்சியபிறகு (புறம் 44, 45, 47), செங்குட்டுவன் நேரிவாயிலிற்பொருது தான் இரண்டாமுறை வடநாடு செல்வதற்குமுன் தன் மைத்துனனை பெருங்கிள்ளியைப் பட்டத்தில் நிறுவினான் (சிலப் XXVII 118-23; புறம் 16). ஆகையால் அச்செய்திக்கு முன்னமே நெடுமுடிக்கிள்ளி பட்டமடைந்தனன். புகாரைக்கடல்கொண்ட பிறகு, நெடுமுடிக்கிள்ளியின் மகன் தொண்டைமான் இளந்திரையன் காஞ்சியில் ஆண்டனன். (மணி XXIV 29-71; XXV 176-204; பெரும்பாணாற்றுப்படை). "இருநிலமருங்கிற் பொருநரைப்பெறாஅச் செருவெங்காதலிற் றிருமாவளவன்" எனக் கரிகாலனுக்கூறப்படுகிறான். (சிலப் V 89-90). மேலும் மணிமேகலை கச்சிமாநகர்புக்ககாலத்து, ஆங்கு 'தொடுகழற்கிள்ளி துணை இளங்கிள்ளி' கட்டுவித்த புத்தசேதியத்தை மணிமேகலை தரிசித்ததாகக் கூறப்பட்டுளது (மணி XXVIII 172-7).

ஆகையாற் கரிகாலனாலமுதல் இளந்திரையன்காலம்வரை சுமார் 100 வருஷகாலம் காஞ்சி சோழராது ஆட்சிக்குட்பட்டிருக்க வேண்டும்.

கி. பி. 437 முதல் 458 வரையாகிலும் சிம்மவர்மன் II என்ற பல்லவன் காஞ்சியிலே அரசபுரிந்தான் (T. R. A. S. 1915 p 482). அவன்றந்தை விஷ்ணுகோபன்மைய (Ep. Md. VIII p. 160) சமுத்திரகுப்தன் (கி. பி. 340-380) வென்றது. இவன் 85 ஆண்டுகள் உயிர் பெற்றிருந்தனனென்றும், 18 வயதிலேயே பட்டம் எய்தினனென்றுங்
கருதியபோதிலும், இவன் பட்டமெய்தியகாலம் கி. பி. 370. இவனுக்கு முன் ஸ்கந்தவர்மன் I, வீரவர்மன், ஸ்கந்தவர்மன் II என்றவர்



காஞ்சியில் ஆண்டனர் (EI VIII 160). தலைமுறை, ஒன்றுக்கு 25 வருஷங்கள் என்ற கணக்கின்படி ஸ்கந்தவர்மன் I கி. பி. 295-ல் பட்ட மெய்தியவனாவன். ஆகையால் கி.பி. மூன்றும் நூற்றாண்டின் இறுதியி லாண்ட சிவஸ்கந்தவர்மன் (Smith's Early History of India
p. 471) இவனேயாவன். இவனும இவனுக்குமுன்னிருந்த பப்பனும (Circa 270-295 கி. பி ) காஞ்சியிலேயே ஆண்டதாக இவனது தாமிர சாஸனங்களினின்றும் தெரிகின்றது (Venkayya's 'Pallavas'). சிம்மவர்மன் IIக்குப் பின் அவன் மகன் ஸ்கந்தவர்மன் III (T.R.A.S. 1915 p. 482), குமாரவிஷ்ணு I, புத்தவர்மன், குமாரவிஷ்ணு II (EI VIII 234), நந்திவர்மன் I, சிம்மவர்மன் III, சிம்மவிஷ்ணு (T.R.A.S. 1911 p.p. 521-4) இவர்கள் ஆண்டார்கள். சிம்மவிஷ்ணு கி.பி.

575-ற பட்டமெய்தினன் (Smith p. 472). ஸ்கந்தவர்மன் III முதல் ஸிம்ஹவர்மன் III முடிய 6 அரசர்கள் 575-458=117 வருஷங்கள் ஆண்டது பொருந்தமுடைத்தே. ஸிம்மவிஷ்ணு முதல் நிருபதுங்கவர்மன் (873-899 கி. பி.) முடிய இடைவிடாமற் பல்லவ அரசர்கள் காஞ்சியில் ஆண்டுவந்தனரென்பது யாவருக்குந்தெரிந்தவிஷயமே. ஆகையால் கி. பி. 270 முதல் 900 வரை இடைப்பட்டகாலத்திற் கரிகாலன்முதல் 4 சோழர்களது ஆட்சியிற் காஞ்சியிருப்பது எலா தென்பது வெளிப்படை. ஸ்ரீமான் இராகவையங்கார் கடைச்சங்க காலமென்று கூறும் கி. பி. 6-ம் நூற்றாண்டின் முற்பகுதியில், அவர் கூறுவது பிசிதே முடைத்தாயின், விஷ்ணுகோபனுக்கும் அவன்மகன் ஸிம்மவர்மன் II க்கும் பதில் கரிகாலன்மரபினரன்றோ காஞ்சியில் இருந்தல்வேண்டும். மேலும், கடப்பாவுக்குஸமீபத்திற் சோழர்கள் குறுநிலமன்னர்களாயிருந்தார்களென்று கி. பி. 640-ல் ஹியூன்தஸாங் எழுதியிருப்பதும் கண்டுகவனிக்கத்தக்கது. (Smith p. p. 462-3; Beal ii 227-30; Watters ii 224). ஆகையால், சோழர்கள் காஞ்சியை அரசுபுரிந்திருக்கக்கூடியகாலமும் கடைச்சங்கத் திறுதிக் காலமுமாக கி. பி. 270-க்கு முன் என்றே பெறப்படும். கி. பி. 3-ம் நூற்றாண்டிற்குப்பின் கடைச்சங்கம்நிகழ்ந்ததென்றால், சங்கநூல்களிற் பல்லவர்களைப்பற்றி ஓரிடத்தேனும் பிரஸ்தாபங்கேட்கப்படாமைக்குத் தக்கசமாதானம்வேண்டும். பல்லவர்கள் காஞ்சியைக் கைப்பற்றி ஆளுதற்குமுன் சோழஅரசர்களை வெற்றிகொண்டிருத்தல் இன்றியமையாது செந்தமிழ் வேண்டுமென்றோ. தங்களது ராஜ்யத்தை எல்லைவரப்பெரிதாக்கி அமைத்துக்கொள்வதெனின் குறுநிலமன்னர்களையும் மற்றை

விடுத்து இவ்வாறுவருகின்றதுஉரையெனப் பொருள்கோடல் தவறாமோ? புத்தராதுகாலத்துக்குப்பின் வருஷத்திற்குஒருபுள்ளியாக இட்டுவைத்துப் பின் சிலவருஷமாகப் புள்ளியிடமறந்து பின்னால் மொத்தமாகக்கணக்கிட்டவிபரமும் ஈண்டைக்கு ஒப்புநோக்கத்தக்கது (Smith p. 47; 9 R. A. S. 1905 p. 51).

சமுத்ரகுப்தன்காலத்தில் மாளுவத்தைப் பலசிற்றரசர்கள் ஆண்டு வந்தனரென்றும், 'நூற்றுவர்கன்னர்' இவரேயென்றும் குட்டுவநூலார் கூறுவர். அவரே ஒப்புக்கொண்டபடி, கி. பி. 390-ல் சந்திரகுப்தன் II மாளுவத்தைக் குப்த ஏகாதிபத்தியத்திற்குட் சொண்டுவந்தானென்றால், கி. பி. 5-ம்நூற்றாண்டில் அந் நூற்றுவர்கன்னர் செங்குட்டுவனுக்கு எவ்வாறு உதவிசெய்யக் கூடும்? கி. பி. 2-ம்நூற்றாண்டிலும் அக்கன்னர் ஏன் மாளுவத்தை ஆண்டுகொண்டிருக்கக்கூடாது?

சிலர் 'நூற்றுவர்கன்னர்' என்னுந்தொடர் யக்ஞஸ்ரீ சாதகர்ணியைக்குறிக்குமென்று கருதுவாராயினர். 'நூற்றுவர்கன்னர்' (சிலப் XXVI 163), 'ஐம்பெருநூற்றின்மர்' (சிலப் XXVII 177), 'ஐம்பத் திருவர்' (XXVI 223), 'மாளுவவேந்தர்' (XXX 159), 'ஏனைஞூற்றுவர்' (XXVII 188) என்பனபோன்ற பிரயோகங்களைநோக்கினால் 'கன்னர்' என்பது பன்மையைக்குறிக்கின்றதென விளங்கும். யக்ஞஸ்ரீயென்பவன் ஆந்திரவரசன். கி. பி. 125-ல் மாளவ உஜ்ஜினியில் சகன்சஷ்டனன் ஆண்டதாகச் கூறுவதாலும், அவனுக்குப்பின் கி. பி. 130 முதல 390 வரை மாளுவத்தை உருத்திரதாமன்முதலான சகவரசர்கள் ஆண்டுவந்ததாலும், மாளுவதிற்கும் ஆந்திரருக்கும் யாதொருசம்பந்தமும் இல்லை.

ஆதலால் ஆந்திரரை மாளுவவேந்தர் என்றுசொல்லுதல் பொருந்தாது. மேலும் 'சாதகாணி' என்றால் மட்குடத்தையொத்தகாதினன் என்பது பொருள்படுமேயன்றி நூற்றுவர் கன்னரெனப்பொருள்படாது. புராணங்களிலும் சாமசூத்திரத்திலும் (Benares Ed. II 7 p. 149) இரகுவம்சத்திலும் (XIII 38) 'சத கர்ணி' என்றுகாணாது 'சாதகாணி'யென்றே காணப்படும். அன்றியும் செங்குட்டுவன் வடதிசையாத்திரைசென்றது கி. பி. 157—160-ல என்று கீழேகாட்டுகிறேன். யக்ஞஸ்ரீ பட்டமெய்தியதோ கி. பி. 173 (Smith Table facing p. 218). ஆகையால் நூற்றுவர்கன்னர் வேறு, யக்ஞஸ்ரீ வேறு.

## கடைச்சங்ககாலம் ௪௫

"தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் போரிற் றொலையுண்ட திதியன் (அகம்-36) இலங்கையில் 5-ம் நூற்றாண்டில் ஆண்ட ததியனேயென்று ஐயங்காரவர்கள் கூறுவர். முதலில் இவ்விருவர்களுக்கும் பெயர் ஒற்றுமைகூட இல்லை. திதியனென்பவன் பொதிய மலைச்சாரலில் அரசாண்டவனாயிருந்த குறுநிலமன்னனென்று அகநானூற்றுச்செய்யுட்கள் (196, 321) தெரிவிக்கின்றன. ததியனோ வெனில் இலங்கையரசன். இருந்த தசினனும் கி. பி. 5 ம் நூற்றாண்டிலிருந்தான். ததியன் பிறந்தது புத்தநிர்வாணத்திற்கு 990 வருஷங்களுக்குப்பின் இருந்ததாக மஹாவம்சம் கூறும். இலங்கைச் சரித்திரத்தில் சம்பந்தப்பட்டவரை புத்தர் நிர்வாணமடைந்தது கி. மு. 489 என்று நாம் சொல்லவேண்டுமென்று பின்னாற்காட்டப்படும். ஆகையால், ததியன்காலம் 990—488=502 கி. பி. என்று தெரியலாகும்.

இதுகாறும் கடைச்சங்ககாலம் 5-வது நூற்றாண்டென்று

## தமிழ்ப்பகுதி.

பல்யாகமுதுகுடுமிப்பெருவழுதி
முதன்முதற் சாஸனங்கற்பித்தவன்
வெகுகாலத்திற்குப்பின்

|

களப்பிரராதிக்கம்

|

கடுங்கோன். களப்பிரரையோட்டி
அரசுரிமை கைக்கொண்டவன்

|

மாறவர்மன் அவனிசூளாமணி

|

செழியன்சேந்தன்

சேந்தன்ஜயந்தவர்மன் என்றும் தெரிகின்றது.

வேள்விக்குடிச்சாஸனம் செழியன்சேந்தனது தந்தை அவனிசூளாமணியென்றும் இவனது தந்தை கடுங்கோனென்றும் தெரிவிக்கின்றது. ஆகவே கீழ்வரும்வமிசாவளி பெறப்படுகின்றது.

பல்யாகமுதுகுடுமிப்பெருவழுதி

|

.....................................

களப்பிரர் ஆதிக்கம்

.....................................

கடுங்கோன் (களப்பிரரைவென்றவன்)

|

மாறவர்மன் அவனிசூளாமணி

|

செழியன் சேந்தன் ஜயந்தவர்மன்

|

அரிகேசரி அசமசமன் மாறவர்மன், நெல்வேலிவென்ற நின்றசீர்நெடுமாறநாயனார்

|

கோச்சடையன் ரணதீரன்

|

அரிகேசரி, பராங்குசன், தேர்மாறன், இராஜஸிம்மன் சங்கரமங்கையிற் பல்லவமல்லன் நந்திவர்மனை வென்றவன். நெல்வேலியிலும் வென்றவன்

|

ஜடிலவர்மன் நெடுஞ்சடையன் பராந்தகன்

இவனது உத்தரமந்திரி

மாறன்காரி (கி. பி. 770)

|

இராஜஸிம்மன் I

|

வரகுணமஹாராஜா (கி. பி. 862-ற் பட்டமெய்தியவன்)

இவர்களுள் நெல்வேலிவென்ற நின்றசீர்நெடுமாறநாயனார் கி.பி. 680 க் குப்பின் பட்டமெய்தினுரென்றல் பொருந்தாது. ஏனெனில் கி. பி. 642-ல வாதாபியை அழித்தசிறுத்தொண்டரை நேரிற்சந்தித்த 16-வ பிராயத்தினராகிய சம்பந்தர் இந்நெடுமாறனை சைவசமயியாக்கினர். ஆகவே இந்நெடுமாறனிடமிருந்து மூன்று தலைமுறைக்கு 770—680 = 90 வருஷம் கிடைக்கின்றது. இது ஒவ்வொருதலைமுறைக்கும் சராசரி 30 வருஷந்தருகின்றது. இவ்வாறுகணக்கிடின், கடுங்கோன் கி. பி. 680—3 × 30 = 590-ல் இருந்தானவன். இவனுக்குமுன் களப்பிரர் தாழுதிக்கமும், அதற்குமுன் நன்மாறனும், நன்மாறனுக்குமுன் உக்கிரப்பெருவழுதியும், உக்கிரப்பெருவழுதிக்குமுன்பு தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியனும், இவனுக்குமுன்பு வெற்றி வேற்செழியனும், இவனுக்குமுன்பு ஆரியப்படைதந்த நெடுஞ்செழியனும் இருந்தவர்கள். சராசரி 30 வருஷம் இருந்தார்களென்று வைத்துக்கொண்டால், ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன் இறந்தகாலம் 590—5 × 30 = 440 கி. பி. ஆகும். கி. பி. 590 தொடங்கி 900 முடிய உள்ள பாண்டியர்களில் ஒருவராவது பையார சங்க நூல்களிற் காணப்படாமையாலே கி. பி. 450-க்குப்பின் கடைச்சங்கம்நிகழ்ந்ததாக எவரும் சொலலத்துணியார்.

செங்கணானைச் சம்பந்தரும், சுந்தரரும், திருமங்கையாழ்வாரும் பாடியிருப்பதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

இங்ஙனமிருக்கவும் ஸ்ரீமான் சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் 8-வது நூற்றாண்டுதான் கடைச்சங்ககாலமென்று வெளியிட்டிருப்பது ஆச்சரியம். இம்முடிபு சிலாலிகித ஆதாரத்தோடு முரண்படுகின்றது. சிலப்பதிகாரவிருத்தாந்தம் அவர் கூறும்வண்ணம் கி.பி. 756ல் நிகழ்ந்ததாயின், அக்காலத்திலிருந்த பாண்டியன் அரிகேசரியாயன்றோ இருத்தல்வேண்டும். நெடுஞ்செழியனாமாறில்லையே. மணிமேகலைச்செய்திகள் கி. பி. 771-ல் நடைபெற்றனவாயின் அக்காலத்துள்ள பாண்டியன் ஜடிலனேயன்றி வெற்றிவேற்செழியனல்லனே. ஆகவே, நெடுஞ்செழியனும் (II) ஜடிலனது மகனான இராஜசிம்மனாதல்வேண்டும். இஃதுண்மையாயின், மேலே ஆராய்ந்த சாஸனங்களுள் ஒன்றேனும் இராஜசிம்மனைத் தலையாலங்கானத்துச்செருவென்றவனாகச் சொல்லாததுந்தவிர, அவற்றுளொன்று, அவனது முன்னோரிற் பெயர்குறியாத ஒருவனுக்கு அக்கீர்த்தியைக்கொடுத்திருப்பது ஆச்சரியமேயன்றோ.

புத்தசமயம் கடைச்சங்ககாலத்தில் மிகவும் உன்னதநிலையிலிருந்ததென்பது மணிமேகலை நூலால் அறியக்கிடக்கின்றது. கி. பி. 600-க்கு வெகுகாலத்திற்கு முன்னமே புத்தசமயம் தளர்வடைந்து எல்லா ராஜ்யம் பரிகசிக்கத்தகுந்த நிலைமையில் வந்துவிட்டதென்று ஹியூன்த் ஸாங்

கூறுவதாலும், மகேந்திரவர்மன் (கி. பி. 600—625) எழுதிய மத்தவிலாஸப்ரஹஸனத்தாலும் தெரிகிறது. பாஹியானும் (கி. பி. 399—414) இந்தியாவிற் புத்தசமயங்குன்றிவருவதாக எழுதியிருக்கின்றார். ஆகையால் கடைசங்ககாலம் கி. பி. 400-க்குப்பின் எனல் பொருந்தாது.

சிலப்பதிகாரத்தில் வடநாட்டு யாத்திரை சென்ற செங்குட்டுவன் தனிமுடியரசரநேகரை வென்றதாகச் சொல்லியிருக்கிறது. சந்திர குப்தன் II கி. பி. 390-ற் சகரை வென்றதுமுதல் ஸ்கந்தகுப்தன்வரை (கி. பி. 480) வடஇந்தியாவிற் குப்தர்கள்மட்டுமே ஆண்டனர். ஆதலால் அக்காலத்தில் வடஇந்தியாவிற் பலர் தனிமுடிமன்னர் இருந்தாரென்றல் ஏலாது. கி. பி. 480-க்குப்பின் 550 வரை யசோதர்மனும் கடைச்சங்ககாலம்
ஆக

அவன் வழியினரும், குப்தரும், சிலகாலம் ஹூணரும் மட்டுமே ஆண்டனர். செங்குட்டுவன் கி. பி. 5-ம் நூற்றாண்டில் இருந்தானெனின் அவன் குப்தரைமட்டுமே போரில் எதிர்த்திருக்கக்கூடும். கி. பி. 370-ல் சமுத்ரகுப்தன் திக்விஜயஞ்செய்து ஆரியவரசர்பெரும்பாலாரையுந் தனக்குக் கீழ்ப்படுத்தினன். கி. பி. 320-க்குப்பின் சங்ககாலமெனின், அக்காலத்துப் பிரதானமாயிருந்த குப்தவரசரைச் செங்குட்டுவன் வென்றதாகக் கூறாததுவியப்பே.

இனி, சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் விரித்துரைக்கப் படுஞ்செய்திகள் இன்னகாலத்து நிகழ்ந்தனவென்று

புத்தநிர்வாணகாலம் ஒன்றினின்றே உணரக்கூடுமாதலின், அதன்காலம் இன்னதென்று நிச்சயிப்பது ஆவசியகம். தன் அபிஷேகத்துக்குப்பின் 14-வது ஆண்டிற் பிரசுரிக்கப்பட்ட சிலாலிகிதங்களில அசோகமௌரியன், ஈஜிப்ட் டாலமிபிலடெல்பாஸ் II (கி. மு. 285-247), மாஸிடோனியா ஆண்டி கோனஸ் கொனுடஸ் (277-239), ஸிரீன்பகஸ் (கி. மு. 258-ல் இறந்தவன்), இபைரஸ் அலெக்ஸாண்டர் (கி. மு. 272-ல் பட்டமெய்தியவன்) ஆகிய இவர்களைத் தன் சமகாலத்தரசராகக் கூறுவர் (Rapson's Ancient India p. 21; Smith p. p. 196-7). ஆகையால் அசோகனது அபிஷேககாலம் (272 to 258) + 13 = கி. மு. 285 to 271 ஆகும். அலெக்ஸாண்டர் இந்தியாவிற்குப் படையெடுத்துவந்தபோது, சுமாலிய நந்தன் ஆண்டுவந்தான். அதன்பின் சீக்கிரம் சந்திரகுப்தன் அரசனாயினன் (கி. மு. 326). ஆகையாற் சந்திரகுப்தனது அபிஷேககாலத்திற்கும் அசோகனது அபிஷேககாலத்திற்கும் இடைப்பட்டகாலம் 326-271 = 55-க்குமேல ஆகாது. புராணங்கள் சந்திரகுப்தனுக்கு 24 ஆண்டுகளும், பிந்துஸாரனுக்கு 25 ஆண்டுகளும் தருகின்றன. மஹா வம்சம் சந்திரகுப்தனுக்கு 24 ஆண்டுகளும், பிந்துஸாரனுக்கு 28 ஆண்டுகளும் தருகின்றது. அசோகனுக்குப் பட்டமெய்தி 4 வருஷங்கட்குப்பின்னரே அபிஷேகம் ஆயிற்று. ஆகவே, சந்திரகுப்த அசோக அபிஷேகங்களுக்கு இடைப்பட்டகாலமாகப் புராணங்கள் 53 ஆண்டுகளையும், மஹா வம்சம் 56 ஆண்டுகளையும் தருகின்றன. இவைகளுள் மேற்கூறினவற்றால் 56 மிகைப்பட்டமையால் 53 ஒப்பத்தக்கது. ஆகவே, சந்திரகுப்தனது அபிஷேககாலம் 326-க்கும் 271+53=324-க்கும் இடைப்பட்டகாலம். அலெக்ஸாண்டர் இந்தியாவைவிட்டுப்போனது

ஸெப்டம்பரில் (Smith p. 114). கார்மீனியாவிலிருக்கும்பொழுது (324 பிப்ரவரி Smith p. 114) தன் அதிகாரிகளை இந்தியர்கள்கொன்றதாகக் கேள்வியுற்றான் (Smith 109, 110). தலையாய்நின்று இக்காரியத்தைமுற்றுவித்தவன் சந்திரகுப்தன் (Justin XV 4). இதற்கு முன்பே அவன் அரசனாய்விட்டான் (Smith 43-4, 117-8); ஆகையாற் சந்திரகுப்தனது அபிஷேககாலம் கி. மு. 325. அசோகனது அபிஷேககாலம் கி. மு. 272. அசோகனது அபிஷேகம் புத்தர் உலகு நீத்து 218-வது வருஷத்திலென்று இலங்கைச்சரிதங்களெல்லாவுங்கூறும். ஆகையாற் புத்தநிர்வாணகாலம் 272+217=கி. மு. 489 எனப் பெறப்படும். ஆகையால் இலங்கைச்சரிதங்களை ஆதாரமாகக்கொண்டு காலநிர்ணயஞ்செய்யுங்கால், கி. மு. 489யே புத்தநிர்வாணகாலமாகக் கொள்ளவேண்டும்.

இம்முடிவை இரண்டொரு உதாரணங்களாற் சரியெனக்காட்டுகின்றேன். ஸில்வேன்லெவி என்பவர் இலங்கை அரசனான மேகவர்ணன் சமுத்ரகுப்தனது காலத்தவனென்றும் இக்குப்தவரசன் கி. பி. 370-ல் தென்னிந்தியாவிற்குப் படையெடுத்துவந்தபோது இலங்கையினின்றும் அடியுறையாக அரியபொருள்களை அனுப்பினனென்றுங் காட்டியிருக்கின்றார் (Journal Asiatique 1900 Pt. I. p. p. 316 for 401). இவன் புத்தருக்குத் 833 வருஷத்திற்குப் பின்வந்து 28 வருஷம் ஆண்டானென்று மஹாவம்சங் கூறும். ஆதலால்

இலங்கைக்குடிகளைக்
கயவாகுவென்னுமரசன் இந்தியாவிற்குவந்து
சிறைமீட்டுத்திரும்பிய
தாக, பூஜாவளி, இராஜரத்நாகரி, இராஜாவளி, ஆகியமூன்று
சரிதங்க
ளும் கூறுகின்றன. இக்கயவாகு, புத்தரது
பிக்ஷாபாத்திரத்தையும்,
பத்தினிதேவியின்காற்சிலம்புகளையும் இந்தியாவினின்றும்
கொண்டுபோனதாக இராஜாவளிதெரிவிக்கின்றது.

இலங்கைக்குக்
இதனால் செங்
குட்டுவன்காலத்தவன் கயவாகு I என்பது
தெள்ளிதினுணரக்கிடக்
கின்றது. காவிரிப்பூம்பட்டினத்தைக்கட்டி
மதிலிடுவித்தகரிகாலன் அச சேந்தமிழ்
(பட்டினப்பாலை), இலங்கைக்குச்சென்று
வேலையாட்களைக்கொண்டு வந்தனன்போலும். இதனையே
'சோழர்படையெடுப்பு' என்று சரிதங் கள் கூறுவதாயென்னுதல்
தவறாகாது. இனி, கயவாகு என்னும் பெயருடைய
அரசர்கள் பலர் இருந்திருக்கலாமென்றும், பிந்திய அரசர்
களதுசரித்திரங்கள் கி. பி. 13-வது நூற்றாண்டிற்றான்
எழுதப்பெற்றன வாகையால்
பிழைபட்டுப்போதற்கிடமுண்டென்றும் சிலர்கூறுவர். ஆனால்,
இலங்கைச்சரிதங்களிற்காணப்படும் அரசர்களது பட்டிகையோ

இடையீடின்றித் தொடர்ச்சியாயும் பூரணமாயுமிருக்கிறது. இலங்கையிலுள்ள பௌத்தர்கள் தமது வழக்கப்பிரகாரம் எழுதிவைத்திருந்த பலபழயசரித்திரக்குறிப்புகளை ஆதாரமாகக்கொண்டே இவை வரையப்பட்டன. இவைகளிற்கூறப்பட்டனவெல்லாம், சிலாசாஸனங்களாலும் பிறகருவியாலும் இதுகாறும் உண்மையெனத் தேறப்பட்ட விஷயங்களோடு முழுவதும் பொருத்தமுடையனவாகவே இருக்கின்றன. கி. மு. 500 முதல் கி. பி. 13-ம் நூற்றூண்டுவரையுள்ள ஒவ்வொரு அரசன்காலத்தையும் நுட்பமாக எடுத்துக்கூறுவனவாயுள்ளன. இலங்கையிலுள்ள பல பௌத்தமடங்களில் கி. பி. 400-ல் 'அத்தகத மஹாவம்சம்' என்ற புராதனசரித்திரநூலொன்று பல ரூபபேதங்களுடன் இருந்ததாகத்தெரிகின்றது. மஹாவம்சத்தின் உரைகாரருக்கும் அவர்காலத்தவர்க்கும் மேற்குறித்த நூல் கிடைத்ததென்பதிலும், அவ்வுரைகாரரெழுதுவனவெல்லா[illegible] நூலையாதாரமாகக்கொண்டுதானுள்ளனவென்பதிலும், அவை [illegible]லாம் உண்மைதானென்பதிலும் தமக்குச் சிறிதும் சந்தேகமேயி[illegible] [illegible]யனைக் கெய்கர் எழுதிச்செல்கின்றூர் (Introd p. XI). [illegible]ச்சங்ககாலம் என்று ஐயங்காரவர்கள்கூறும் 5-ம்நூற்றூண்டின் முற்பகுதியில் பாஹியான் இலங்கைக்குவந்தபோது 'புத்ததாஸன் ஆண்டானென்போமா அல்லது ஐயங்காரவர்கள் ஓரிடத்திற்கூறும்வண்ணம் ஒரு கயவாகுவே ஆண்டனென்போமா, அல்லது அவர் வேறிடத்திற்சொல்வதுபோலத் ததி[illegible]யன்றூன் ஆண்டனனென்போமா? இவ்வாறு ஒன்றுக்கொன்று முரண்படுகின்றதை அவர்கள் மறந்தனர்போலும்.

தீபவம்சம், மகாவம்சத்திற்குமுந்தியது. அதன்படி
கஜ்பாகுவின் காலம் புத்தருக்குப்பின் 642-664.
மகாவம்சத்தின்படி புத்தருக்குப் பின் 653—675.
டர்னர துப்ஹாவம்சத்தின் படி புதருக்குப்பின் கடைச்சங்க காலம் ருஅரு
665 வரை 12 வருஷம் அரசாண்டான். ஆகையால் தீபவம்சத்
திற்கொடுத்திருப்பதுதான் சரியாயிருக்கலாம். ஆகவே
முதலாவது கஜபாகுவின்காலம் (642 to 664) அல்லது (653 to
675—488= (154 to 176 கி. பி.) அல்லது 165 to 187 கி.
பி.யாயிருத்தல்வேண் டும். எவ்வணமாயினும் கி. பி. 187-க்குப்பின்
இருக்கமுடியாது. கடைச் சங்கத்திறுதிக்காலமும் கி. பி.
2-ம் நூற்றூண்டுக்குப்பின்னில்லை. இனிச் சிலப்பதிகா
ரத்திற்காணப்படும் ஜோதிஷக்குறிப்புக்களையெடுத்தாராய் வோம்.
சுவாமிக்கண்ணுப்பிள்ளை யவ ர் கள்
தாங்குறிப்பிடுங்காலத்துக்கு ஆதாரமாகக்கொண்ட சிலப்பதிகார நூ
லுரைப்பகுதிகள் கீழ்வருவன:-

"வான்கண்விழியாவைகறையாமத்து
மீன்றிகழ்விசும்பின் ... ம்மதிநீங்கக்
காரிருணின்றகடை ... . ..ங்கூல" (சிலப். X 1—3)

"ஆடித்திங்கட்பேரிருட் ... த்
தழல்சேர்குட்டத்தட்டமிஞான்று
வெள்ளிவாரத்தொள்ளெரியுண்ண
வுரைசான்மதுரையோடரசுகேடுறுமெனு
முரையுமுண்டே" (சிலப். XXIII 133—7).

"அந்தச்சித்திரைத்திங்கட்புகுதிகாள், சோதி; திதி—மூன்றும்

க்கம், வாரம்—ஞாயிறு. இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணையுங் கூடிய சனிவாரத்திற் கொடியேற்றி, 'நாலேழ்நாளினும்' என்பதனால் இருபத்தெட்டுநாளும் விழாநடந்து கொடியிறங்கி, வைகாசி இருபத் தெட்டினிற் பூருவபக்கத்தின் பதின்மூன்றும்பக்கமும் சோமவாரமும் பெற்ற அனுடத்தில் நாட்கடவாடி கூடுதலின், வைகாசி இருபத்தொன்ப திற் செவ்வாய்க்கிழமையுங்கேட்டையும்பெற்ற நாசயோகத்து நிறை மதிப் பதினாலா ம்பக்கத்து வைகலறப்பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலேயென்றவா று. அது பூருவபக்கமென் றுதோன்றக் 'காரிருளின் றகடைநாட்கங்குல்' என்றார்". (சிலப். X 1—3 உரை பக்கம் 230). மேற்கண்ட ஜோதிஷக்குறிப்புகளை வைத்துக்கொண்டு நான் கணித்ததில் கி. பி. 1 முதல் 1400 வரை பொருவருஷமாவது முழுவதும் பொருந்தவில்லை.

சிலப்பதிகாரப்பதிப்பாசிரியரான மகா மகோபாத்தியாயர் சாமிநாதையரவர்களும் "இவ்விசேடவுரையிலுள்ள ஜோதிஷ சந்தமிழ் காலவரையறை பொருந்தாததுபோற்றோற்றுகிறது" (சிலப்-பக்கம் 230) என்று எழுதியிருக்கிறார்கள். ஆனால் சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் கி. பி. 756 எல்லாஜோதிஷகுறிப்புகளுக்கும் பொருத்தமாக இருக்கிறதென்று எழுதியிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் கொடுக்குங்காரணங்களையும் கொண்டமுடிபுகளையும் நுண்ணிதின் ஆராய்தல் வேண்டும்.

முதலில் அந்தவருஷத்தில் (கி. பி. 756) சித்திரைமாதம்

ஞாயிற்றுக்

கிழமையன்று மெதாடங்கிற்றென்றும், நக்ஷத்திரம் சுவாதியென்றும், இந்நக்ஷத்திரம் சூரியோதயத்தின்மேல் 38 நாழிகைப்பின்வந்து மறுநாள் உதயாத்பரம 35½ நாழிகைமுடிய இருந்ததென்றும், அந்நாளைச் சித்திரைநாளென்றுதான் சாதாரணமாய் வழங்குவதென்றும், ஆனால் கண்ணகியுங்கோவலனும் புகாரைவிட்டுச்சென்றது செவ்வாயுங் கேட்டையுமபொருந்தியநாளாதலின் அந்நாளிலிருந்து பின்னாற்கணித்துச் சோதிநக்ஷத்திரமென்று அடியார்க்குநல்லார் வரைகின்றாரென்றும் சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் சொல்லுகின்றார்கள். ஒருநாளில் சூரியோதயத்தில் எந்நக்ஷத்திரம் இருக்கிறதோ அதைத்தான் அந்தத்தினத்து நக்ஷத்திரமாகச்சொல்லுவது நமதுதேசத்தின் வழக்கம். ஆனால் ஒருதினத்தில் ஒருலக்னத்தைச் சுபகரமானதென்று எடுத்துக்கொள்ளவேண்டியதாயிருந்தால், அந்தலக்னத்திற்குரியதிதியும நக்ஷத்திரமுங் கூறப்படும். சித்திரைப்புகுதிநாளைச்சொல்லவேண்டிய இந்தஇடத்தில் சுபலக்னமுதலியவைபார்க்கும் ஆவசியகமில்லை. ஆகவே, சித்திரைநக்ஷத்திரத்தைச் சோதியென்று அடியார்க்குநல்லார் கூறினாரென்றுகருதுதற்குத் தக்கசமாதானமிருத்தல்வேண்டும். 29ந் தேதிக் கேட்டையிலிருந்து பின்னாற்கணித்துச் சோதியென்றுகொண்டார் என்று பிள்ளையவர்கள் இதை விவரிக்கின்றார்கள். எந்தஆதாரத்தைக்கொண்டு இவ்வாறுகூறினரென்பது புலப்படவில்லை. நூல் தோன்றியகாலத்திலிருந்த ஓர் உரைகாரரால் சோதிடக்குறிப்புகள் கொடுக்கப்பட்டு வரன்முறையாய் அடியார்க்குநல்லார்காலமவரை வந்ததென்றும அதனையாதாரமாகக்கொ

ாண்டே இவர் இவ்வளவு நுட்பமாய்த் திதி வாரம நக்ஷத்திரங்களைக் குறித்தி நக்ஷன்ருரென் றும் பிள்ளை யவர்க ளே வேறோரிடத்திலெ ழுதுகின்றார்கள். இங்ஙனம் சொலலுபவர்கள்,

பின்னோக்கிக்கணித்துப்பார்த்து அடியார்க்குநல்லார் வரைகின்றார் கடைச்சங்ககாலம் ஒன்று

என்றும் கூறுகிறார். இவ்வாறு ஒன்றுக்கொன்றுமுரணுகின்ற இவ்

விரண்டும் பிள்ளையவர்களதுகொள்கையைஸ்தாபிப்பதற்கு அத்தியா

வசியமாகின்றன. மேலும் பின்னோக்கிக்கணித்தபோதிலும் சோதி

பெறப்படாது. ஏனெனில் சித்திரைப்புகுதிநாள் ஞாயிறாகவும் வைகாசி

29 செவ்வாயாகவுமிருத்தலால், அச்சித்திரை மாதம் 30நாளே உடைத்

தென்றும், இவ்விரண்டுநாட்களுக்கும் இடைப்பட்டகாலம் 58 நாட்க

ளெனவும் அறிகின்றோம். ச ராசரி நாளொன்றிற்கு ஒருநக்ஷத்திரமாகச்

சித்திரைப்புகுதிநாளன்று, கேட்டைக்கு 58 நக்ஷத்திரங்களுக்குமுந்தின

(அதாவது சோதியல்லாது) சித்திரைநக்ஷத்திரமே இருந்திருக்கவேண்

டும். இவ்விஷயமொன்றே நமதுமனத்தில் ஐயத்தைவிளைக்கப்போது

மானது. கீழ்வருவன அவ்வையத்தை உறுதிப்படுத்துகின்றன. சித்
திலை ரப்புகுதிநாளிலுள்ள திதி மூன்றாந்திதியென்றிருப்பதை ஒன்றாந்
திதியென்று பிள்ளையவர்கள் திருத்துகின்றார்கள். ஏனெனில் 57 நாட் கழித்து வைகாசி 28-ல் திதி 0 13.* 0 3-லிருந்து 0 13 முடிய 55 நாளுக்குமேலாகாது. ஆகையால்
மூன்றாந்திதியென்றிருப்பது ஜோதிஷ கணிதத்தின்படி அசம்பாவிதமென்கிறார். இதுசரியே. இது ஏடெழுது வோரால்நேர்ந்த
பிழையெனின், அங்ஙனம்நேர்ந்ததென்றுகருதுதற்கு முடியாத அநேகஇடங்களில் அடியார்க்குநல்லார் பிழைபடஎழுதுகின்றார். ஆகையால் ஜோதிடவிஷயத்தில் உரைகாரரது அறியாமையே இப்பிழைகளுக்கெல்லாம் காரணமேயன்றிப் பிறிதன்று. ஆதலின் பிள்ளையவர்கள் திருத்தியமைத்துக் கொண்ட ஜோதிடக்குறிப்புகளைவைத் துக்கணித்தல் சரியன்று. மேலும் அவ்வாறே ஒன்றாந்திதியென்று திருத்திக்கொள்ளினும், சித்திலை ரப்புகுதிநாளினதுதிதி அதுவன்று ; பகல் 11-மணிக்குமேலேதான் இத்திதி ஆரம்பிக்கின்றதாதலின். இவ் விதமாக கி. பி. 756-ல் சித்திரைமாதமுதற்றேதிக்குக்கொடுத்திருக்கும் கணிதம் பொருந் துமாறில்லை.

சித்திரை 28-ல், 0 13-ம்திதியென்றும், 14-ம்திதியும் அன்று வெகுநேரங்கழித்துவந்திருக்கின்றதென்றும், ஆகையால் அத்தினத்தில் பௌர்ணமியேயில்லையென்றும் பிள்ளையவர்களே ஒப்புக்கொள்ளுகிறார் கள். ஒருமாதத்தில, இன்னதேதியில், இன்னவாரத்தில், இன்ன

* 01ß என்றெழுதியிருப்பதைச் சுக்கிலபக்ஷத்திரயோதசி என்றும், 03 என்றெழுதியிருப்பதைச் சுக்கிலபக்ஷத்திருதியையென்றும் படித்துக்கொள்க. ஒஅ சேந்த'ßß

திதியில், இன்னநக்ஷத்திரத்தில் நடைபெறவதென்றேற்படுத்திய விழா வானது முன்பின்னாகத்தான்வருமென்றும், அதனால் நூலிற்குறித்த காலத்துக்குச் சிறிது மாறியிருப்பினும் தவறாகாதென்றும் பிள்ளையவர் கள் வாதிக்கின்றார்கள். இந்திரவிழவு இன்னதேதியில் நடக்கவேண்டு மென்ற நியதியிருந்ததற்கு ஆதாரமு மில் லை. நமதுதேச வழக்குமமது வன்று. மேலும் இந்திரவிழவு பொதுவாக இன்னகாலத்துநடக்க வேண்டுமென்பதைக்குறித்து அடியார்க்குநல்லாரெ ழுதவில்லை. அவர் கூறுவதெல்லாம், கோவலன்கதைநடந்த அந்தவருஷத்தில, இன்ன காலத்தில் விழாநடந்தது என்பதே. இது "அந்தச்சித்திரைத்திங்கட் புகுதிநாள்" என உரைகாரர் எழுதிப்போவதினாலேவிளங்கும். ஒரு திதியில் நடைபெறவேண்டுமென்றேற்பட்டு, குறித்தஅவ்வருஷத்தில் அத்திதியிலன்றி வேறுதிதியில்வருமாயின் பொதுவாகஏற்பட்டதிதி யைக்கூறு து, அவவருஷத்துள்ள திதியையன்றோகூறுவர் உரையாளர் ? அவ்வருஷத்தில்நேர்ந்த சமபவத்தை விவரிப்பதன்றோ ஆ சி ரி ய ர் கருத்து? விழாக்கள் பிள்ளையவர்கள்சொல்லும்விதத்தில நடைபெற்ற வென்பதற்கு மணிமேகலையில் இந்திரவிழவும் சிலப்பதிகாரத்தில் காம னதிவிழவும் அவ்வாறேவருமென்றுசொல்லியிருப்பதாக ஆதாரங் காட்டுகின்றார்கள். ஐ. பி. 756-லும் 771-லும் சிலப்பதிகார

மணி மேகலைச்செய்திகள் நிகழ்ந்தனஎன்ற தமதுகொள்கையையே ஆதார மாகக்கொண்டதனுமில, இஃதுதப்பட்டதேயன்றிப் பிறிதன்று. மேற் கூறியதினின்று சித்திரை 28-க்கும அவர்கள் குறிப்பிடுங் காலம் பொருந்தவில்லை.

இனி வைகாசிமாதத்தை எடுத்துக்கொள்வோம். இம்மாதம் 28ல் நாட்கடலாடி, 29-ல் இரவு வைகறையாமத்திற் கோவலனும் கண்ணகியும் பிரயாணமானார்களென்று உரைகாரர் தெளிவாகக்கூறுகின்றார். கி.பி. 756-ல் வைகாசி 28க் குறிப்புகளெல்லாமொத்திருக்கின்றன. ஆனால் 29-க்குறிப்புகள் பொருந்தவேயில்லை. அன்றிரவு பிரயாண மானசமயமாகும். பின்நிகழ்ந்த துர்ச்சம்பவங்களுக்கெல்லாம் முன்னறி குறியாயிருந்ததும் அக்காலம் உரைகா ர ர் சோ திடகணவஞ்செய்தற்கு ஏதுவாயிருந்ததும் அது . முக்கியமான இச்சமயத்தில் உரைகாரர் கொடுக்குந்திதியும் பிள்ளையவர்கள்கொடுக்குந்திதியும் பொருந்தவில்லை. பிள்ளையவர்கள்கணனப்படி செவ்வாய்க்கிழமையன்று பௌர்ணமி கடைச்சங்ககாலம் இருக்

யாதலின் இரவுமுழுவதும்நிலாவுண்டு. நிலவடைந்ததற்கும் சூரியோதய மாவதற்கும் மத்தியில் இருளேயிலலை. ஆனால் நூலிலோ "வெண்மதி நீங்கக்காரிருணின்றகடைநாட்கங்குல் " என்று கொடுத்திருக்கிறது. இதற்காகச் செவ்வாய்க்கிழமையிரவென்பதைச் செவ்வாய்க்குமுந்திய அதாவது திங்கட்கிழமையிரவு என்றுகொண்டார்கள்! அவர்கள்சொல வதுபோற் கொள்ளினும செவ்வாயுங்கேட்டையுங்கூடியது கோவலன்

புறப்பட்டசமயததாகாதே ! அவனும சண்ணகியும புறப்பட்டு 4 மணி நேரத்திற்குப்பின்னரோ இ ரண்டும் சேருகின்றன. 4 மணிநேரத்துக்குப் பின்வந்த நாசயோகம் கோவலன் கண்ணகியை ஒன் றுஞ்செய்யவல்ல தன்றென்பது ஹோராசாஸ்திர ததிற்பழகியார்வல்லார்க்கும் ஒப்ப முடிந்ததேயன்றோ. செவ்வாய்க்கிழமைமயிரவென்பது திங்கட்கிழமை யிரவென் றும்பொ நள்படுமென்று தா ங்கொ காண்டதைவலியுறுத்தற்கு நாட்கடலாடிய அன்றே கோவலனும் கண்ணகியும் புறப்பட்டார்க ளென் று நூலாதாரம காட்டி னார்கள். இது உ ரைகாரர் நூலுட்கூறு வனவற்றோடு முர ணுகின்றாரென் றும் ஆகையால் அவருரைப்பன வற்றை யாதாரமாக க்கொள்ளுதல் கூடாதென் றும் காட்டுமேயன்றிப் பிறிதன்று. மேலும் ப ிள்ளையவர்கள்கணனப்படி ஒருநாளின்காலையில் 13-ந்திதியிருக்கின்றது. 14-ந்திதியும் அன் றுதொடங்கி அன்றே முடிந்துவிடுகின்றது. இது அபூர்வமே. பிள்ளையவர்கள் இவ்வா றிருக்க வேண்டுவதும் ஒருநியதியென் றும், இந்நியதிக்கு கி. பி. 756 ஒன்றே ஒத்திருக்கின்றதென் றும் கூறுகிறார்கள். இது நூலையும நூலோடொவ் வாதவுரையையும, தாம் முன்பே அமைத்துக்கொண்டதோர்முடி போடு பொருத்த முயல்வ தின்பயனும். இவ்விதமாகவந்தமுடிபுக்குங் கூடச் சூரியாஸ்தமனபிரத்யக்ஷகா லத்தைதக்கொண்டு முற்காலத்திற் சங்கிராந்திசமயங்கணிக்கப்பட்டதென் றுங் கொள்ளவேண்டியதாயிருக் கது. கி. பி. 756-ல் ஏப்ரில் 20-ல் மத்தியசூரியோதயம் 30 நாழிகை 30 பலத்திற்குப்பின் இடபசங்கிராந்திநேர்ந்ததிலிருந்து இடபமுதற் றேதி ஒருநாட்கழித்துவந்ததென்பதைத்தவிர வேறுகாரணம் அவர்கள் காட்டவில்லை. இவ்வா று திருத்தியும் புதுக்கியும் விளக்கியும்

அமைக் கப்பட்ட ஒருகொள்கை பிழையின்றியிருக்குமோ?

கி.பி. 756 வைகாசிப் பௌர்ணிமையன்று சந்திரகிரகணமிருந்ததாக வும், ஆயின் நூலுரையாசிரியரிருவரும் அதனைக்குறித்து யாதொன்றும் [illegible]

[illegible]

கூறவில்லையாதலின் கவனிக்கவேண்டியதில்லையென்றும் பிள்ளையவர் கள் எழுதுகிறார்கள். கி. பி. 756 உண்மையானகாலமாயிருக்குமாயின், நூலாசிரியராவது உரையாசிரியராவது இக்கிரகணத்தைப்பற்றி ஒன்றுங்கூறாதது ஆச்சரியம். கோவலனும் கண்ணகியும் புறப்படும் போது ஏற்பட்ட துர்நிமித்தங்களையெல்லாம் ஒருசேர எடுத்துக்கூறும் போது, துர்நிமித்தங்களுள் அதி முக்கியமான சந்திரகிரகணம் அன் றிருந்திருக்குமாயின் அதைக்கூறாததற்குக் காரணமென்ன?

இனி, இவர்களது காலகணனம் மூலத்துட்கூறுவனவற்றோடாயி னும் ஒத்திருக்கின்றதா என்று ஆராய்கிறேன். இவர்கள் கணித்ததில் கி.பி.756 ஜூலை 23-ல மத்யசூரியாஸ்தமனசமயத்துப் பரணிகார்த்திகை யும் அஷ்டமியுமிருந்தன. எனது கணனப்படி சூரியோதயத்துக்கு 38 நாழிகை 16 பலத்திற்கப்புறந்தான் பரணி தொடங்கிற்று. ● 6 திதி 41 நாழிகை 20 பலம்வரையிருந்தது. அன்று 8-ம் திதியுமில்லை, கிருத்திகையுமில்லை. அவர்களது கணனமே சரியென்றுவைத்துக் கொண்டபோதிலும், நூலிற்கண்டவறே ந டு பொருந்துமாறில்லை. ஏனெனின் மதுரையெரியுண்டது நள்ளிருளாகலின் (சிலப்-பதிகம் 41-3), அந்நள்ளிருளில் பரணியும், 8-ம்திதியும் சேர்ந்திருத்தல்வேண் டும். இன்னும், அ

நம்பதவுரையாசிரியர் 'அழல்சேர்குட்டம்' என் பதற்கு அதன்பொருளாகிய இருத்திகையென் றெழுதாது 'பரணிகார்த்திகை' யென்றெழுதியதைநோக்குங்கால பதப்பொருளைவிசேஷமாகக் கவனியாது உண்மையைக்கவனித்து எழுதுகின்றாரென்றேற்படுமாக லின் கள்ளிருட்சமயத்துப் பரணியும் 8-ம்திதியும் நிச்சயமாயிருந்துதீர வேண்டும் என்று பிள்ளையவர்களே சொல்லுகிறார்கள். அவ்வாறு சேர்ந்திருக்கவில்லையென்பது பிரத்தியக்ஷம். இனி நூலிற்காணப்படு வனவற்றோடு ஒத்தேயிருந்தது என்று வைத்துக்கொள்ளினுங்கூட, கி.பி. 8-ம்நூற்றாண்டிற்றான் சிலப்பதிகாரச்செய்தி நடந்ததாகல்வேண்டு மென்று வேறுவகையால் நிச்சயிக்கப்பட்டாலன்றிப் பிள்ளையவர்கள் சொல்வது பயனில்லாததாய்முடியும். ஏனெனில் உரையைநீக்கி நூலுட் கூறப்பட்டவைகளைமட்டு மெடுத்துக்கொண்டால், அவைகளுக்குப் பொருத்தமானகாலம் 2-ம் நூற்றாண்டில்மட்டும், 1 1 வருஷங்கள் கிடைக் கின்றன. அவைகள் கி. பி. 100, 103, 107, 117, 130, 134, 144, 157, 171, 188, 198 ஆகவே கி. பி. 756 பொருத்தமில்லையென்பது காட்டப்பட்டது.



இனி, ஜோதிஷவிஷயத்தில் அடியார்க்குநல்லாருரை ஆதாரமாகக் கொள்ளுதற்குத் தகுதியுடைத்தன்றென்பதைக் காட்டுகின்றேன்.

காமனது விழவைப்பற்றிச் சிலப்பதிகாரத்தில்,

"காமர்நட வுடன்,

ரங்காதையில் (68-71 & 109- 118; பிள்ளையவர்கள் மூன்பதாங்கா மெத மன்றது தவறுகும்) கூறுகின் ருள். பின்னர்க்கே ாவலன் கோமா ண்ணை விட்டுச்சென்று, அன்றே இரவுவிடியுமுன் தன்னோடுநகர்வி ட் டுப்போவதற்கு அவளை உடன் படுத்துகின்றான். ஆகையால் படலாட டும் பிரயாணமும் ஒரேநாளில் நிகழ்ந்தன. மேலும் உரைகா ர் சொல்லிக்குஞ்ஜோதிஷக்குறிப்புகளுக் குப் பொருத்தமானகாலம் கி. பி. 1 முதல் 1400 முடியக்கணித்ததிலும் கிடைக்கவில்லை. ஆகையால் உரைகாரர் ஜோதிஷத்தில்வல்லவான்று. சாதாரணமாய் நாசயோகமெனவழங்கும் செவ்வாயையும்சேட்டையை யும் ஆதாரமாகக்கொண்டு மற்றக்குறிப்பு களையெல்லாந் தம்மாலியன்ற ளவு கணித்துத்தருகின்றாரெனத்தோன்றுகிறது. அக்குறிப்புகள் கர்ணபரம்பரையாய் அவருக்குவந்தன வெனின், அவருக்குமுன்னிருந்த அரும்பதவுரையாசிரியர் அவைகளைக்கூறுததற்குக் காரணம் யாது?

இனி, பிள்ளையவர்கள் அறுதியிட்டமணிமேகலைக்காலத்தை யாராய்தல்வேண்டும். அவர்கள் பின்வரும் மூன்றுதொடர்களைத் தமது முடிபுக்கு ஆதாரமாகக்கொண்டார்கள். அவை:—

கடைச்சங்ககாலம் ருகூ

(1) "இருகிளவேனிலெரிகதிரிடபத்
தொருபதின்மேலுமொருமூன்றுசென்றபின்
மீனத்திடைநிலைமீனத்தகவையிற்

புதகர்தோன்றுவதை மணிமேகலைக்குதெரியரகுபசருத நமடையவளாயின் முக்கியமான அவ்விஷயத்தை அவள் ெளபமாவு தெளிவாயுடபரிங்கமாயும் வெளியிட்டிருத்தல் வேண்டும்.

புததர்த்தோன்றுமென்ப து மணிமேகலை நூலின் 12-வது காதை யினின்று காட்டப்பட்ட மேற்குறித்த இரண்டாவது தொடரிற்றான் முதன்முதல் பிரஸ்தா பிக்கப்படுகின்றது. ஆண்டுள்ள 'தோன்றும்' என்னுஞ்சொலலாற் புததர் தோற்ப எதிர்காலநிகழ்ச்சியாகக்குறிக்கப் பட்டதன்றி அஃது இறந்தகாலச்செய்தியாகக்குறிக்கப்பட்டிலது. பிள்ளையவர்கள்சொல்லுமபடி மணிமேகலை மணிபல்லவஞ்சென் றிருந்தகாலத்துப் புததர்தோன்றியதுண்மையாயின், மணிபல்லவஞ் சென்றுமீண்ட மணிமேகலையைசசந்தித்த அறவணவடிகள் புத்தரது தோற்றத்தை இறந்தகாலச்செய்தியாகவன்றோ கூறுதல்வேண்டும். மேலும் பிள்ளையவர்கள்,'சொல்லுமேவார் துகாலத்திலேனும் அதற் குச்சற்று முன்பின்னாரேனும் புத்தர் தோன்றியவராதல்வேண்டுமென்று நாம் ஊகிக்கலாம். பின்னும் ஓரிடத்தில் மாதவியின்றந்தை தானே ஒருகால் வெகுதூரத்திற்கப்புறம் புதியபுத்தரிடமிருந்து அறவுரைகேட்டல் இயலுமென்று சொல்லுகின்றான். வெகுகாலத்திற்கப் கடைச்சங்ககாலம் இருகு புறமென்றுசொல்லியது ஒருவேளை இப்புதியபுத்தரும் கௌதமரைப் போலச் சம்போதியடைந்து

ஆசாரியனுருக்காலத்தை (அதாவது 36வது வயதில்) க்குறித்ததென்றேகொள்ளுதல்வேண்டும். மாதவியின் றந்தைபோன்ற ஒரு முநியோனுர்கு 35 வருஷங்களுக்குப்பிறகு என் பது வெகுகாலந்தான். ஒரு கா ல மறுபிறப்பின்காலமாகவுமிருக்கலாம்'' என்று சொல்லுகின்றார்கள். இவ்வாறு கூறியன அனைத்தும் பிழையே யன்றிவேறில்லை. பிள்ளையவர்கள் தாமே சிரமமெடுத்து மணிமேகலை நூலை வாசித்திருப்பார்களாயின் மாதவியின்றந்தையைப்பற்றி யாதொன்றும் எழுதமாட்டார்கள். மணிமேகலை நான்முழுவதினும் அங்ஙனமொருவனுண்டென்றே றுசொல்லியிருப்பதேயில்லை. ஆனால் கோவலன்றந்தையாகிய மாசாத்துவான் புத்தரிடமிருந்து அறவுரை கேட்கும் விருப்பினனாயிருந்தான் என்று நூலிற்சொல்லியிருப்பது உண்மையே. புத்தர் 1616-வருஷங்களுக்குப்பின்றோன்றுவரென்பது புதியபுத்தரது ஞானோதயகாலத்தைக் குறிப்பதாகலாமென்று அனுமானிக்கின்றார்கள். ஆனால் அவர்காட்டும் வரிகளுக்குச சிறிது பின்னேநோக்கினால் புத்தரது மறுபிறப்புத்தான் குறிக்கப்படுகிறதென் பது ஸ்பஷ்டமாகின்றது. "புத்தஞாயிறுதோன்றுங்காலை'' என்பது தொடங்கி அதிசயசம்பவங்கள் எடுத்துக் கூறப்படுகின்றன. இவைகள் மகான்களது பிறப்பைபுணர்த்தும் அறிகுறிகளாய் நினைக்கப்படுவனவே யன்றித் தங்கள்தங்களுக்கமைந்த மேலாகோபகாரச்செயல்களை நிறைவேற்றுதற்பொருட்டு உலகத்தாரது முன்னிலையில் ஒருவர் வருதலைக் குறிப்பனவல்ல. இயேசுநாதர், கிருஷ்ணர், புத்தர் இவர்களது சரிதங்களையொப்பிடுக. மேலும்,

"அங்நாட்பிறந்தவன நுளறங்கேட்டோர்
இன்னுப்பிறவியிகங்தோராதலின்'' (மணி. XXII. 99-100) என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனுள் முதல்வரியில், 'அங்நாட் பிறந்து' என்பதனை 'கேட்போர்' என்பதனோடுகூட்டி, அவன் என்பது புத்தை ரக்குறிப்பதாகக் கொண்டு, அங்நாளிலேபிறந்து புத்தரது அறவுரையைக்கேட்டோர் என்பது பொருளாகக்கொள்ளுதல் சிறிதும் ஏற்புடைத்தாகாது. 'அவன்' என்பது சுட்டுப்பெயராயிற்றே! இதனுற் சுட்டப்படும்பெயரன்றியும் தனித்தும்பிரயோகப்படுத்துதல்
[illegible] சேர்தமிழ்

கூடுமா? 'புத்தர்' என்பதற்கும் 'அவன்' என்பதற்கும் மத்தியில் வேறு பலரையும் வேறு பலவிஷயங்களையும்பற்றிக்கூறும் பலவரிகள் வந்துள் ளனவே, அன்றியும்! அங்நாளிற் பிறவாதார் பின் புத்தரது அறவுரைகேட்டாலேயும் அவர் பிறவியிகததலின்றென்பதா கருத்து? அறவுரைகேட்டல் பிரதானமேயன்றி அங்நாளிற்பிறத்தலென்பது பிரதானமாகுமா? ஆதலால், 'அங்நாட்பிறந்தவன்' என் னுங்தொடரைப் பிரியாது ஒருசொன்னடையதாகக்கொண்டு புததரைக்குறிக்கின்ற தென்றுதான் பொருள்சோடலவேண்டும். புத்தர் இவ்வாறு மறுமுறைதோன்றுதல் வெகுகாலத்திற்குப்பின் நிகழுமென்று கருதப்பட்டமை மணிமேகலையிற் பல இடங்களிலுங் கூறப்பட்டிருக்கிறது. சொல் வோரதுகாலததினேனும் அதற்குசசற்று முன் பின்பாகவேனும்நிகழ்ந்ததாகக்கருதுவது பெரிதும பிழைபாடுடைததாம. பிள்ளையவர்கள் கொண்டபடி அறவணவடி

துறவியுள்ளந்தோன்றித்தொடரும்
பிறவிநீத்தபெற்றியமாகுவம்
அத்திறமாயினுமநேககாலம்
எத்திறத்தார்க்குமிருகதியுஞ்செய்குவம்" (XXVI. 35-61) என்று மணிமேகலைக்குக் கண்ணகிதெய்வமாய்நின்று உரைக்கின்றாள். இவ்வரிகளிற் கடைசியிரண்டிற்கும 'யாம்நிர்வாணத்தையடைவது பல நாளைக்குப்பின்பேயாயினு' மென்ற ஸ்ரீ சாமிநாதையரவர்கள் உரை எழுதியுள்ளார்கள். பிள்ளையவர்கள் தங்களதுகொள்கைக்கு ஆதாரமாய்க்கொண்டிருக்குந்தொடருங் கூட எனதுகருத்திற்கு அநுசரணை யாகவேயிருக்கின்றது. அது வருமாறு:—

'தீவினையுருப்பச்சென்றநின்றாதையுந்
தேவரிற்றோற்றிமுற்செய்தவப்பயத்தா
லாங்கத்தீவினையின்னுந்துய்த்துப்
பூங்கொடிமுன்னவன்போதியினல்லறந
தாங்கியதவத்தாற்றான்றவந்தாங்கிக்
காதலிதன்னொடுகபிலையம்பதியி
ஞாதனல்லறங்கேட்டுவீடெய்துமென்
றற்புதக்கிளவியறிந்தோர் கூறச்
சொற்படயனுணாந்தேன்றோகையானு
மங்ஙனங்கவனறநெறிகேட்குவன்" (XXVIII. 138-147) புத்தரது மறுபிறப்பைப்பற்றிப்பேசுவோரில் ஒருவராவது பரமோத்கிருஷ்டமான அதனை இறந்தகாலச்செய்தியென்று கருதியதாகவுந் தெரியவில்லை.

பிள்ளையவர்கள்காட்டிய 3-ந்தொடரில் மணிமேகலைக்கு

ஆபுத்திரன்கதையையும் அவனதும றுபிறப்பையும் அறவணவடிகள் கூறுகின்றார். புத்தரதுபிறந்தநாளன்று ஆபுத்திரனும் பற்பல அதிசயசம்பவங்கள் முற்குறிசெய்யப் பிறந்தானென்று தெரிவிக்கின்றார். சிலர் இதனைப்பற்றி ஆச்சரியங்கொண்டனர்.

"போதிமாதவன்பூமியிற்றோன்றுங்
காலமன்றியுங்கண்டனசிறப்பென" (XV. 29-30) ருகூஅ
சேந்தமிழ்

ஆனால் இங்ஙனந்தோன்றிய ஆபுத்திரன்வேறு, அறவணவடிகள் முன் னுறவுணர்ந்து உரைக்கின்ற புத்தர் அவதாரம்வேறு. ஒன்றற்கொன்று சம்பந்தம் இருப்பதாக அவராற்கூறப்படவில்லை. அன்றியும் இதற் குச்சிலவரிகளுக்குக்கீழே ஆபுத்திரன் புண்ணியராஜனாகப்பிறந்திருக் கிறானென்று தாங்கூறுஞசமயத்து, அவன் ஒரு யுவராஜாவாக இருக் கின்றானென்று அவர் தெரிவிக்கின்றார்.

"அலைரசாள்செல்வமவன்பா லுண்மையி
னிரைதார்வேநதஞைபினன்" (XV. 14-5)

ஆகையால் புண்ணியரா ஜன்பிறந் து குறைந்தபக்ஷம் 16-வருஷங்களா வது ஆகியிருத்தல்வேண்டும். அவன் இர ண்டாவதுமுறைதிருவவதா ரஞ்செய்த புத்தராகவிருப்பா னானால் பேசுஞ்சமயத்திற்கு முந்தின நாளே பிறந்தவனாவன். ஏனெனில் மணிபல்லவத்துக் கொமுநீரிலஞ் சிக்குவந்துசென்றவன்றே மணிமேகலை தன் தாயினிடம்போய் ஆங்குத் தாமதியாதே உடன் அறவணவடி களது ஆசிரமத்துக்கு ஆபுத்திரன் கதைகேட்கும்விருப்பினளா ய் ப் போனாள்.

புண்ணியராஜன்பிறந்தது கி. பி. 752 என்றும் புத்தரதுபுனராவதாரம் கி. பி. 771 என்றும் குறிப்பிடுவதனால் பிள்ளையவர்களே இம்முடிவை ஒப்புக்கொண்டவராகின்றார்கள்.

இவ்விதமாகப் பிள்ளையவர்கள் எடுத்துக்கொண்ட மூன்றுதொடர்களுள், இரண்டு ஜோதிஷக்குறிப்புகளைத தருகின்றன. ஆனால் புத்தரது புனராவதாரத்தைப்பற்றி யொன்றுங்கூறவேயில்லை. ஒன்று புத்தர் மறுமுறைதோன்றுங்காலத்தைக்கூறுகின்றது. ஆனால் அதனுள் ஜோதிஷக்குறிப்புகள் காணப்படவில்லை. முதலாவதுதொடர் அமுதசுரபி வருஷந்தோறுந்தோன்றுவதைச்சொல்லுகின்றது. இரண்டாவதுதொடர் புத்தரதுபுனராவதாரத்தைக் கூறுகின்றது. மூன்றாவது தொடர் புண்ணியராஜன்பிறந்த காலத்தைத் தெரிவிக்கின்றது. இரண்டு தொடர்களிலுள்ள ஜோதிஷக்குறிப்புக்கள் புத்தரது (வருஷந்தோறுமுள்ள) பிறந்தநாளுக்குரியன. அந்நாடோறும் அமுதசுரபி பொய்கைக்குமேலேதோன்றும். அந்நாளொன்றில் புண்ணியராஜனும் பிறந்தனன்.

௨

## கடைச்சங்ககாலம்.

---

"செந்தமிழ்" (தொகுதி-௧௫ பகுதி-௧௧-ல்) ௫௯௮-ஆம்பக்கத்தொடர்ச்சி.

---

இனி இரண்டுதொடரிலுங்காணப்படுகின்ற

ஜோதிஷக்குறிப்புக் களையாராய்வோம். "இருது இளவேனில்" என்பது சித்திரை வைகாசி மாதங்கள். "மேஷவிருஷபௌஸௌரோவஸந்த:" * என்று போதாயனரும், "சைத்ரோவைசாகஶ்சவஸந்த:" என்று கௌடிலியரும் (அர்த்தசாஸ்திரம் p. 109) கூறுகின்றார்கள். 'எரிகதிரிடபம்' என்பது வைகாசி அல்லது இடபமாதம், 'மீனத்திடைநிலை மீனத்தகவையின்' என்பது நக்ஷத்திரங்களுள் நடுவிலுள்ள நக்ஷத்திரம். புத்தரது சரித்திரத்துட் பெரும்பாலும் வருவதும், அவர் ஜன்மநக்ஷத்திரமும் விசாகந்தான். ஆதலால் நடுநக்ஷத்திரமென்பது இவ்விசாகமே. அங்ஙனமாயின், இப்போதுவழங்குகிறபடியன்றிக் கிருத்திகா நக்ஷத்திரத்தை முதலதாகக்கொண்டு
நக்ஷத்திரங்கள் தொடங்கின வென்றல்வேண்டும். தற்காலவழக்கில் முதல்நக்ஷத்திரம் அச்சுவினி. கி. பி. 500-க்கு முன் னெல்லாம் கிருத்திகாதிமுறைதான்வழக்கிலிருந்தது. கி. பி. 500-ல் மேஷாயனம் அச்சுவினியின்தொடக்கத்திலிருந்தால் அச்சுவினியாரம்பத்தை மேஷாரம்பத்தோ டுபொருத்துவதற்காகக் கிருத்திகாதி முறையைக்கைவிட்டு அச்சுவினியாதிமுறையைக் கொண்டனர்.

இதனால் மணிமேகலை கி. பி. 500-க்குமுன்செய்யப்பட்டநூலென் பதுபோதரும். புத்தரதுகாலத்தில்வழங்கியமுறையைப்பற்றிக் கிருத் திகை யீண்டு முதல்நக்ஷத்திரமாகக்கூறப்படுகின்றதென்றும், மணி மேகலைநூலாசிரியரதுகாலத்து அவ்வழக்குவீழ்ந்து

அச்சுவினிமுத லாகஎண்ணப்பட்டதென்றும் சொல்வதற்கு நூலில் ஆதாரமேயில்லை. அவ்வாறுதானிருந்ததுஎன்பதைச் சான்றுதந்துநிறுவ வேண்டும் பொறுப்பு பிள்ளையவர்களைச்சேர்ந்தது.

'ஒருபத்தின்மேலும்ஒருமூன்றுசென்றபின்'

என்றதன்பொருளென்ன? கிருத்திகையிலிருந்து 14-ம் நக்ஷத்திரம்விசாகமாதலின்,

2



இவ்வரியும் இதற்கடுத்தவரியும்சேர்த்து விசாகமென்று ஸ்ரீ ச-மிநா தையரவர்கள்பொருள்கொண்டார்கள். மாதம், நக்ஷத்திரம், திதி இம் மூன்றுங்கொண்டு ஜன்மதினங்குறிப்பிடும்வழககில்லையாதலின் இப் பொருளேபொருத்தமுடையதாகஇருக்கின்றது. மேலும் புத்தர் பிறந்தநாளில் பௌர்ணிமையாயிருந்ததேயன்றி, சுக்ல சதுர்த்தசி யன்று. மணிமேகலை மணிபல்லவத் துக்குச்சென்றவருஷத்திலும் புத்தாஜன்மதினத்தின் திதி

" மதிநாள்முற்றியமங்கலத்திருநாள் " (மணி X. 83).

என்றுகூறப்படுவதனால்பௌர்ணிமையென்பதுநிச்சயமாகின்றது.] 3- ஆம் தேதியென்று பிள்ளையவர்கள்பொருள்கொண்டார்கள். யாதேனும் ஓர்காலத்தைச்சுட்டுதற்கு, மாதம், திதி, நக்ஷத்திரம், இவற்றாற் குறிப்பது பண்டைவழக்கு. மாதம், தேதி, வாரம்

இவற்றூற்குறிப்பது தற்காலவழக்கு . ஆசிரியர் தற்காலவழக்கையநுசரிததவராயின் நக்ஷத் திரத்திற்குப்பதில் வா ரத்தையன்றேசொ ல்லியிருத்தல்வேண்டும் . அங்ஙனஞ்சொல்லாமையின் , அவர்பண்டைவழக்கினேயேயநுசரித்த வராதல்வேண்டும். ஆ தலால் தேதிஇட ம்பெறுதற்கு நியாயமே யில்லை. மேலும் 'ஒருபத்தின்மேலும் ஒருமூன்றுசேன்றபின்' என்று கூறுவதால், 14-ம்தேதியென்றன்றேகணக்கிடுதல்வேண்டும். 13-ம் தேதிஎவ்வாறுவந்தது.

1616 வருஷங்கள்கழித்துப்புத்தர் மறுமுறைதோன்றுவரென்று நூலிற்கூறப்பட்டுள்ளது. தென்னிந்தியாவிலும்இலங்கையிலும்பர்மா விலும் சையாமிலும் வழங்குங்கர்ணபரம்பரையில்புத்தர் கி.மு. 544-ல் உலகுநீத்ததாகச்சொல்லப்படுகின்றது தம்காலத்திற்குச் சுமார் 1200வருஷங்கட்குமுன்பு புத்தர்நிர்வாணமானதாகச் சிலபௌத்தர் கள் நம்பியிருந்தனரென்று ஹியூன் த்ஸாங் தெரிவிக்கின்றார். இது மே லேகாட்டப்பட்டகாலத்திற்குஒத்தேயிருக்கின்றது. 1200-640 560 கி. மு. (WatterII28) கி.பி.642-ல்நிகழ்ந்த பல்லவநரசிம்மவர்மனுக் கும் சளுக்கியபுலாகேசிக்கும் ஏற்பட்டயுத்தத்தைப்புத்தநிர்வாணத் திற்குப்பிறகு 1184—1 193-ல்ஆண்ட இலங்கைத் தாதோபதிஸ்ஸன் II காலத்தில்நடந்ததாக இலங்கைமஹாவம்சமும், பூஜாவளியும் கூறு வதால் கி.பி.642ல் புத்தநிர்வாணம்(1184to1193)-642கி.மு. 543to 552-ல்,அதாவது கி.மு.544-ல்நடந்ததாகநம்பப்பட்டது.

பண்டைக்காலத்தில் புத்தர் கி.மு.489-லோ அல்லது 544-லோ உயிர் நீத்ததாகத்தமிழர்நம்பினதாகக்கருதுவதற்கிடமுண்டு. (மஹாவம்சம் அத்தியாயம் 47-செய்யுட்கள்15,18,24IRAS1913pp.527-9) பிள் ளையவர்கள்இக்காலத்தை எடுத்தாளவில்லை. இதனைஎடுத்துக்கொண்டால் மணிமேகலையின்காலம் 1616-544-1073 கி. பி. அல்லது 1616 489-1128கி.பி. என்றுமுடியும். இதுஅவர்கள்கொள்கையோடு மாறுபடுதலின் சீனதேசகர்ணபரம்பரையில் வழங்கிவந்தகாலத்தை (கி.மு.850)எடுத்தாண்டனர். இவ்வாறு எடுததாளுதற்கு ஆதார மின்னதென்பதுங்காட்டவில்லை. இன்னும் அக்காலத்தையும் கி.மு. 846என்றுதமதுசௌகரியத்திற்குஏற்றபடி திரித்துககொண்டார்கள். தமிழ் பௌத்தர்கள்தங்களுக்குள் வழஙகிவந்தகாலத்தைக்கைவிட்டுச் சீனதேசத்தில்வழங்கியகாலத்தைக் கைக்கொள்ளுதற்கு நியாய மென்ன? மேற்காட்டியவாற்றால் பிள்ளையவர்களதுவாதத்தொடரில் ஒவ்வொன்றும் அதிதுர்ப்பலமாயிருக்கின்றதென்பது பெறப்படும்.

கி. பி. 5-ம் நூற்றூண்டிற்குமுன் வாரதினம் வழக்கில் இருந்த தில்லையென்றும், இம்முடிந்தமுடிபு கடைச்சங்கம் 2-ம் நூற்றூண்டு என்று சொல்வோரது கொள்கையோடு

முரண்படுகின்றதென்றும், ஆதலின் அக்கொள்கைமுற்றும் பிழைபாடுடைத்தென்றும் பிள்ளை யவர்கள் வாதிக்கின்றார்கள். இவ்வாதம் எத்துணைவலியுடைத்தென் பதனை இனி ஆராய்தல்வேண்டும். அவர்கள் "சிலப்பதிகாரநூலில் வாரதினம் சொல்லப்பட்டிருக்கின்றது என்ற ஒரு விஷயத்தைக் கொண்டே அந்நூல் கி. பி. 5-ம நூற்றாண்டிற்குமுன் றேன்றி யிருக்கமுடியாதென்றும், கி. பி. 8-அல்லது 9-ம் நூற்றாண்டுவரை யும் அதன் காலத்தை எதிர்பார்க்கலாமென்றும் நாம் நிச்சயித்தல் கூடும். ஏனெனின் டாகடர் பிலீட்என்பவர் வாரதினங்களைப்பற்றி கி. பி. 5-ம் நூற்றாண்டிற்குமுன் பு இந்தியர்கட்குத்தெரியாதென் றும், 8-ம் நூற்றாண்டிற்குமுன்பு இந்தியாவில்எப்பாகத் திலும் அது பொது வழக்கில்இருந்ததில்லையென்றும் நன்குகஸ்தாபித்திருக்கிறார்" என்று கூறுகிறார்கள். சங்ககாலத்தில் வாரதினம் வழக்கில் இருந்தது என் பதை கான்பீறுக்கவில்லை. '
'செருப்ற்றுச்சென்றாரெங்காதலர்யாமு' மெழுநாளேமேனிபசந்து"
என்றுபிள்ளையவர்கள் காட்டும்திருக்குறட் செய்யுளேயன்றி மணிமேகலையினின்றும் பலதொடர்கள் (VII-23-5, [illegible]
சேத்தமிழ்

106-8, XIII-14, XXII-72-4, XXIX-19; மேலும், சிலப். பதிகம்
50-63) அவ்விஷயத்தைவலியுறுத்துகின்றன.
ஏழுநாள்என்றஅள விலே யாதொருபிரயாசமுமின்றி நினைத்தறியாமலே இனைத்தென அறியப்படாநாட்கள்கொண்ட

வோர்காலத்தைக்குறிப்பிடக்கூடும்படி அத்துணைச்சர்வசாதாரணமாக வாரதினங்கள் வழங்கிவந்தனவென்று தோன்றுகின்றது.

பிள்ளையவர்கள் தேவாரத்தைமட்டும்பார்த்திருப்பார்களாயின் 8-ம் நூற்றூண்டிற்குமுன் வாரதினங்கள் இந்தியாவில்வழங்கப்படவில்லையென்பதை ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்கள். ஏனெனில் 2-வதுதிருமுறையில் 'வேயுறுதோளிபங்கன்' என்னும்பதிகத்தில் சம்பந்தமூர்த்திசுவாமிகள் ' 'ஞாயிறு திங்கள் செவ் வாய்புதன்வியாழம் வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே ஆசறு நல்லநல்லஅவை நல்லநல்ல அடியாரவர்க்குமிகவே''என அருளிச்செய்திருப்பது லோகப்பிரசித் தம். சம்பந்தர்7-ம்நூற்றூண்டிலிருந்தவராதலின் வாரங்கள்அக்கா லத்தில் சாதாரணவழக்கில் இருந்தனவென்பது நன்குணரக்கிடக்கின் றது. ஏ னெனில் நாம்காட்டியமேற்கோளிற் கிரகவரிசை பூமியி னின்றும் கிரகங்களின்தூரத்தின்பிரகாரம் சனி,வியாழன்,செவ்வாய், ஞாயிறு,வெள்ளி, புதன்,திங்கள்எ ன்ற இயல்பானமுறையையல்லாது வாரமுறையைப்பின்பற்றிஇருக்கின்றது.

கி.பி.5-ம்நூற்றூண்டிற்குமுன் வாரங்கள் இந்தியாவில்வழக்கில் இருந்ததில்லை என்பதற்கு டாக்டர் ப்ளீட் காரணங்களாகத்தருவன இரண்டே. 1 'கி.பி.484க்குமுன் னுள்ளசாஸனங்களில் வாரநாட்கள் காணப்படாமை. 2'

இக்காலத்திற்குமுந்தியதென்றுஒருதலையா ய்நிச்சயிக்கப்பட்டநூல்களில் வாரநாட்களைப்பற்றி ஒன்றும்சொல்லப் படாமை.

கி.பி.484க்குமுன் னுள்ளசிலாசாஸனங்களில் வாரங்களைப்பற்றிச் சொல்லப்படவில்லையானால் அதினின் றூஹிக்கக்கூடியதென்ன? காலங் காட்டாதசிலாசாஸனங்களில் வ ா ர நா ட் க ள் சொல்லப்பட்டிருக்கு மாயின் அவைகள் கி. பி. 484-க்குப்பின்வைக்கப்படவேண்டுமென்ப த ன் றி அக்காலத்திற்குமுன் இந்தியர்கட்கு வாரநாட்களேதெரியா தென்பது பெறப்படுமா ? சிலாலேககர்களுக்குள் இம்முறையில் சில கடைச்சங்ககாலம் காட்ட யிலெழுதவேண்டுமென் னும்ஒருநியமனம் இருப்பது சகஜமல்லவா ? சர்வசாதாரணமாய் வாரநாட்களை ஜனங்கள்வழங்கத்தொடங்கியபின் னும் பக்ஷம்திதிநக்ஷத்திரம் இவற்றாற் காலங்குறிக்கும் பழையநிய மனத்தைமாற்றி வாரத்தாற்காலங்குறிக்கும் புதுநியமனத்தை லேக க ர் அ நு ச ரி ப் ப த ற் கு ச் சிலநூற்றாண்டுகள்சென்றிருக்கவேண்டு மென்றுகருதுவது தவறாமா ?

மத்ஸ்ய, பத்ம, விஷ்ணுபுராணங்களில் வாரத்தின்முறையிற் கிர கங்கள்வரையப்பட்டுள்ளன. (Matsya 93—10 to 20; Padma V. 78, 79, 82; Vishnu. I 12). இவைகளில் மத்ஸ்யபுராணம் கி. பி. 275—300-ல் இயற்றப்பெற்றது. (F. E.

Pargiter's Purana text of the Dynasties of the Kali age M'rod. paras 48—52) வைகானஸசூத்திரத்தில் புதவாரமென்பது காணப்படுகின்றது. (Macdonell's Skt. Lit. p. 262). காளிதாசரது (கி. பி. 450) சாகுந்தளத்திலுள்ள 'வைகானஸ்பரிகிஷ்டிதா:' என்பதை ஸ்ரீநிவாசர் என்னுமுரையாளர் "வைகானஸ்ஸூத்ர மேவவானப்ரஸ்தாச்ரமஸ்ய உக்தத்வாத்ததாச்ரமவர்த்திநாம்வைகாநஸத்வவ்யபதேச இதிபாவ:" வைகாநஸசூத்திரம்ஒன்றிலேயே துறந்தோரதுநெறிகூறப்படுதலானே வைகாநஸர்கள்என்றுஅழைக்கப்படுவார்கள் என்று விரித்து எழுதுகின்றார். இன்னும்மநுஸ்மிருதியில் (VI. 21)

"புஷ்பமூலபலைர்வாபிகேவலைர்வர்தயேத்சதா
காலபக்வை:ஸ்வயம்சீர்ணை:வைகாநஸமதேஸ்ம்ருத:"

என்று கூறப்பட்டுள்ளது. குல்லூகபட்டர்என்னும் பிரசித்திபெற்ற உரையாசிரியர் "வைகாநஸமதம், விகநஸப்ரோக்தம்ஸூத்ரம்வைகாநஸம். மதம்தத்ரஹிவாநப்ரஸ்தஸ்யதர்மஸ்யபூரண:உபதேச:" என்றெழுதுகின்றார் (M. Seshagiri Sastri's search for Sanskrit and Tamil Mss. II. p. 8). இதிலிருந்து மநுஸ்மிருதிக்குமுந்தியது வைகாநஸசூத்திரமென்றும் அந்தஸ்மிருதியில் அதுஎடுத்தாளப்பட்டிருக்கிறதென்றும்

புலனுகின்றது. மநுஸ்மிருதி கி. பி. 270-ல் தோன்றியிருக்கவேண்டுமென்றுசொல்லுதற்கு நியாயங்களுள. ஆந் திரர் களுக்கு க்ஷத்திரியபதவிகூறப்படாமையேயன்றி, அவர்களை வைதேஹிகபுருஷர்களுக்கும் காரா வரஸ்திரீகளுக்கும் உண்டான சம் பந்து சேர்தமிழ்

பந்தத்தாற்றேன்றியவரென்றும், மிகத்தாழ்ந்தஜாதியின ரென்றும், கிராமங்களுக்குவெளியேவசித்துவந்தார்களென்றும், காட்டுமிருகங் களைக்கொல்லுதலே அவர்களதுகுலதர்மமென்றும் அதிற்கூறப்பட் டுள்ளது. (மநுஸ்மிருதி X. 36, 48). ஆந்திரர்கள் கி. மு. 230- முதல் கி. பி. 227-வரை அர சாட்சிபுரிந்துகொண்டிருந்தார்கள். ஆத லால் கி. பி. 227-க்குப்பின்னேதான் ஆந்திரர்களுக்கு மநுஸ்மிருதி யிற்கூறியிருப்பதுபொருந்தும். மேலும் மநுஸ்மிருதியில் லிச்சிவி கள் 'விராத்யர்கள்' (பஞ்சமர்) என்றழைக்கப்படுகின்றனர். (X. 22). குப்தஅரசர்கள் தங்களை லிச்சிவிவம்சத்தினராகப் பெருமையுடன் சொல்லிக்கொள்வதினல், அவர்கள் இராஜ்யா திகாரம்பெறுதறகுமுன் பு தான் லிச்சிவிகளை இவ்வாறுசொல்லுதல்கூடும். குப்தர்கள் கி. பி. 320-ல் ஆட்சிசெய்யத்தொடங்கினர். ஆதலால் தற்காலத்திலிருக் கும் மநுஸ்மிருதி சுமார் கி. பி. 270-ல் தோன்றினதாகவேண்டும். (S. V. Ketkar's History of caste in India I. 65—6). ஆகையால் அதிலேஎடுத்தாளப்பட்ட வைகாநஸசூத்திரம் கி. பி. 200-க்கு மிகமுந்தியதென்பதும், அக்காலத்துக்குமுன்னரேவாநாட்கள் அறி

யப்பட்டிருந்தனவென்பதும் தெளிவாகின்றது.

மேலும்ஆரியதேவரென்ற பௌத்தநூலாசிரியர் தாமியற்றிய ஒருநூலில்(Published in I.A.S.B.1898)ராசியையும் வாரத்தை யும்குறிக்கின்றார். இவ்வாரியதேவர் நாகார்ஜுனருக்குச் சமகாலத் தவர் (I.A.O.S. XXXI 2+1). நாகார்ஜுனரின்சரித்திரத்தையும் அவர் இயற்றிய 'மஹாபிரஞாபாரமிதாசூத்திரவியாக்கியாசாஸ்திர'த் தையும் கி.பி.405-ல்குமாரஜீவர் சீனத்தில்மொழிபெயர்த்தனர். நாகார் ஜுனர் ஒருசாதவாஹன னுடன் ஒரேகாலததிலிறந்தனரென்றும், அவருக்குப்பின்னும் ஒருசாதவா ஹனனுண்டானென்றும் ஹியூன்த் ஸாங்(கி.பி,640)கூறுகின்றார்(Watters II207) சாதவாஹனனென்ற அடைமொழி கி.மு.230toகி.பி.227-ல்ஆண்ட ஆந்திரவாசருக்கே உரியது.நாகார்ஜுனருக்குப்பின்னும் ஒருசாதவாஹனனிருந்ததால் ஆந்திரரில் கடைசியான புலோமான் III (கி.பி.220-7) பட்டமெய்து வதற்குமுன்னரே அவர்இறந்திருக்கவேண்டும். அதாவது கி.பி. 220க்குமுன்னரே அவரிறந்திருக்கவேண்டும். அவர் கனிஷ்கனுக்குப் பின் காச்மீரத்தைஆண்ட அபிமன்யுவின்சமகாலததவர் எனக் கல்ஹ கடைச்சங்ககாலம் ஹண

ணர்கூறுவர்.(இராஜதரங்கிணி I. 1 73,177)அதற்கேற்ப நாகார்ஜுன ரியற்றிய நூல்களிலும்

கனிஷ்கன், அவன் சமகாலத்தவரான வசுமித்திரர், அசுவகோஷர் முதலானவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. (Watters II 204) மேலும் அவர் இயற்றிய 'மஹாபிரஞாபாரமிதா சூத்திரவியாக்யாசாஸ்திர'மென் பது கனிஷ்கன் கூட்டுவித்த புத்த சங்கத்தில் (கி.பி. 100 Smith p 269) காத்தியாயனீபுத்திரரியற்றிய 'மஹாபிரஞாபாரமிதாசூத்ர'த்தின் பாஷ்யமாகும். ஆகையால் நாகார்ஜுனர் கி.பி.100க்குப்பின்னும் 220க்குமுன்னும் அதாவது 2-ம் நூற்றாண்டில் ஜீவித்திருந்தனர். அவருக்குச் சமகாலத்தவரான ஆரியதேவரும் அந்த 2-ம் நூற்றாண்டிலேயே இருந்தவராதல்வேண்டும். அவ்வாரியதேவர்வாரதினத்தைக்கூறுவதால், வார நாட்கள்சொல்லப்பட்டிருக்கும் நூல்களெல்லாம் கி.பி. 5-ம் நூற்றாண்டிற்குப்பின் வந்தவையாதல்வேண்டுமென்னுங்கொள்கை நிலைபெறாதென்பதும், கடைச்சங்ககாலம் கி.பி 2-ம் நூற்றாண்டென்பதற்கு வாரதினமொன்றைச் சிலப்பதிகாரங்கூறுவது ஓர் தடையாகாதென்றும் நன்கு தெளியப்பட்டது.

இதுகாறுஞ்செய்த ஆராய்ச்சியானே கடைச்சங்ககாலம் கி.பி. 2-ம் நூற்றாண்டென்பது தெளியப்பட்டது. இனிச் சிலப்பதிகாரமணிமேகலைச்செய்திகள் நிகழ்ந்திருக்கக்கூடியவருஷங்கள் இன்னவெனச் சுட்டி வரையறுக்கமுயலுவோம். கண்ணகியைப்பிரதிஷ்டித்து விழவுகொண்டாடியசமயத்துக் கஜபாகு வந்திருந்தனனென்றும், அவன்கி.பி.154—187ல்

ஆண்டான்என்பதும் காட்டப்பட்டது. மதுரை யெரியுண்டசமயத்தைப்பற்றிச் சிலப்பதிகாரத்திலேகொடுக்கப்பட்ட ஜோதிஷக்குறிப்புகளுக்கும் பொருத்தமானவை கி.பி.2-ம் நூற்றூண்டில் 1 1 வருஷங்களேயென்றும், அவை கி.பி.100,1 03,107
1 1 7,1 30, 134, 144,157,1 7 1, 188,1 98என்பனவென்றும் கூறினேம். மதுரையெரியுண்டதற்கும் கண்ணகிபிரதிஷ்டைக்கும் மத்தியில் 3வருஷங்களேசென்றன என்பது கீழேகாட்டுவேன். கி.பி.100முதல் 1 44முடியவுள்ளகாலமும் கி.பி. 188,198 இவ்விரண்டுவருஷங்களும் கஜபாகுவின் ஆட்சிக்காலத்திற்குப்புறம்பாகஉள்ளனவாதலின் அவை களைநீக்கினல், கி.பி.157,171ஆகியஇரண்டேவருஷங்கள் எஞ்சுகின்றன. இவ்விரண்டினுள் ஏதைக்கைக்கொள்வோமென்பதற்கு, சிலப் கூசுஎ
செந்தமிழ்

பதிகாரத்திலும் மணிமேகலையிலுங்கொடுக்கப்பட்டிருக்கிற விஷயங் களைப்பரிசீலனைசெய்யவேண்டும். கோவலன் இறந்ததைக்கேட்டதும் மாதவிதானுந்துறந்து, மணிமேகலையையும் போதித்தானம்புரிகின்றுள். (சிலப்XXVII103-8) கண்ணகியைப்பிரதிஷ்டைசெய்யும்பொழுது, செங்குட்டுவன்தேவந்திகையைநோக்கி மணிமேகலை யிளையளா யிருந்துந் துறத்தற்குக்காரணம்யாதெனவினவுகின்றுன் (XXX1-5). மணிமேகலை ஆடவரணைந்துபெருநலனுகரும் பீடு
பெ று ப ரு வ மடைந்தபொழுது

(அவ்வாறுபருவமடைந்ததின்வருணனை XXX. 10—21-ல் விரிவாய்க்கூறப்பட்டுளது), மாதவியின்கற்றுய் மாதவி யிடத்து மணிமேகலையையென்செய்யப்போகின்றுயெனக்கேட்ப, (XXX. 22–3), மாதவி தனதுமகளைத்துறவுபூணச்செய்தாளென்று தேவந்திகைகூறுகின்றுள் (XXX. 24—9). சிலப்பதிகாரம் XXX. 10—21 வரிகளைநோக்கினுல் கண்ணகியைப்பிரதிஷ்டைசெய்தசமயத்து மணிமேகலை 14-வயதிற்குக் குறைந்திருக்கமுடியாது என்றறியலாம். மணிமேகலைநூலிலுள்ளசெய்திகள்நிகழ்ந்தகாலத்து அவளுக்குஎன்னவயதிருக்கலாமென்று பார்க்கவேண்டும். அந்நூல் 3-ம் காதையில் அவளைப் பருவமங்கையாயிருந்தாளென்றுகூறுதலினுல், 18-வயதிற்குள்ளாகத்தானிருக்கவேண்டும். உதயகுமரனென்னும் அரசிளங்குமரன் இவளைக்காதலித்து மணிமேகலைபருவமடைந்தனளோவெனச் சுதமதியிடத்துவினவுகின்றுன் (IV. 97—102). இதனுல் குலத்தலைமக்களதுகண்வழிநுழைந்து கருத்தினையுருக்கும் பெண்ணலங்கனிந்தபருவத்தள்என்பதுபோதரும். இன்னும் "இளையள்வளையோளென்றுனக்கியாவரும், விளைபொருளுரையார்" (மணி. X. 79—80) என்றுசொல்லப்படுவதும் அவளதுபருவமினைத்தென்பதைக்காட்டும்.

இதுகாறுங்கூறியவாற்றுல் கண்ணகிபிரதிஷ்டை சமயத்து மணிமேகலைக்குவயது 14-க்குக்குறைந்திருக்கமுடியாதென்பதும் அவள்மணிபல்லவத்திற்குச்சென்றகாலத்தில் அவளுக்கு வயது 18-க்குமேற்பட்டிருக்கமுடியாதென்பதும்

வகித்தல்கூடும். ஆகவே இவ்விருசெய்திகட்கும்இடைப்பட்டகாலம் 4- வருஷங்கட்கு மேற்பட்டிராதென்பது தெளியக்கிடக்கின்றது.

கண்ணகிபிரதிஷ்டைக்கு எவ்வளவுகாலத்துக்குமுன் கோவல னிறந்தானென்பதை இனிக்கவனிக்கவேண்டும்.

கோவலனிறந்து கடைச்சங்ககாலம் சுசக

சிறிதுகாலத்துக்குட் கண்ணகியும் மரணமானாள். (சிலப். பதிகம் 50—3) கண்ணகி விண்ணுலகிற்சென்ற அதிசயத்தைக்கண்ணுற்ற மலைவாணர்கள், அப்போதுமலைவளங்காணுதற்பொருட்டுவந்திருந்த செங்குட்டுவனிடத்தில் அந்த அற்புதசம்பவத்தைத்தெரிவிக்கின்றார்கள் (சிலப். XXV. 57—61). மதுரையெரியுண்டதை நேரிற்கண்டு பின் வீரபத்தினிசென்றவழியே 14-நாளகத்து (சிலப். பதிகம் 51) சேரநாட்டுக்குவந்த சீத்தலைச்சாத்தனாரும் விவரித்துக்கூறுகின்றார். (சிலப். பதிகம் 41—3). தனதுதேவிபிரார்த்தித்தவண்ணம் கண்ணகியைப்பிரதிஷ்டித்தற்காக இமயநதினின்றுங்கல்கொணருதற்பொருட்டுச் செங்குட்டுவன்வடநாட்டியாத்திரைசெல்கின்றான். மலைவளங்காண்டற்காக வஞ்சியைவிட்டுச்சென்றதற்கும் வடநாட்டியாத்திரை கழிந்துசேர்தற்கும் இடைநின்றகாலம் 'ஐயைந்திருமதியம்' (சிலப். XXVII. 149) அவ்வாறு வஞ்சியுட்புகுதற்குமுன்தான்சிறைபிடித்து வந்த ஆரியவரசரை மற்றைத்தமிழரசர்க்குக் காட்டிவரும்வண்ணம்

வில்லவன்கோதையையனுப்பியிருந்தான். அவ்வாறே சோழ, பாண்டியர்களிடத்துச்சென்று ஆரியவரசரைக்காட்டிச் சேரன்செங் குட்டுவனது வெற்றித்திறத்தை வில்லவன்கோதையியந்தபொ ழுது, அவர்கள் இகழ்ந்துகூறியதுகேட்டு மனம்பொறுதவனுய்த் தனதுஅர சனிடத்தில்நடந்தவற்றைச்சொல்லுதற்கு நேராகவருகின்றான். இங் ஙனம் இவன்வ ந்துசேருதற்கு 3 அல்லது 4-மாதங்களுக்குமேற்சென் றிராது. செங்குட்டுவனிதைக்கேட்டதும், கோபங்கொண்டெழுகின் றான். மாடலன் அவனதுகோபத்தைத்தணித்து ஆரியவரசரைச்சிறை விடுக்கும்படிசெய்கிறான். முன்னமேஎடுப்பித்திருந்தகோயிலில் இமா. மலைக்கல்லாற்செய்தகண்ணகியைப் பிரதிஷ்டைசெய்கின்றான். (சிலப். XXVIII. 224—234) இவ்வாறு செங்குட்டுவன் வடநாட்டியாத்திரைசென்றிருந்த 32மாதங்களுள் கண்ணகிகோட்டம்அமைக்கப் பெற்றது. அவன் திரும்பிய3,4மாதங்களில் கண்ணகிபிரதிஷ்டையு மாயிற்று. ஆகையால் கோவலன்மரணத்திற்கும் கண்ணகிபிர தி ஷ்டைக்கும் இடைநின்றகாலம் 3வருஷங்களேயென்றது பெறப்படும். மேல்வரும்XXIX-ம்காதையிற்கூறப்படுவனவற்றாலும் இதுஉறு யடைகின்றது. அக்காதையுள்"காவற்பெண்டும் அடித்தோழியுங் க வுட்சாத்தனுடனுறைந்த தேவந்திகையு முடன்கூடிச் சேயிழையை

காண்டுமென்று மதுரைமாநகர்புகுந்து மூதிராமுலைப்பூசல்கேட்டாங் கடைக்கலமிழந்தயிழந்த விடைக்குலமகளிடமெய்தி யையையவண் மகளோடும்வையையொருவழிக்கொண்டு மாமலைமீமிசையேறிக் கோமகடன்கோயில்புக்கு நங்கைக்குச்சிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத்திற முரைப்பார்மன்" எனக் காணப்படுகின்றது. இதிற்சொல்லியிருக்குஞ் செய்திகளுக்கு 3 வருஷங்களுக்குமேற்சென்றிராது. 32மாதங்கள் என்று நூலகததுக்காணப்படாமற்போயினை, மிகக்குறைந்தகாலந் தான்சென்றிருக்கவேண்டுமென்று நினைக்கக்கூடியவிதத்திற்றான் செய்திகளுள்ளன. கண்ணகி பிரதிஷ்டைக்குப்பின்னால் மணிமேகலை நூலாரம்பத்திற் கூறப்பட்டசெய்திகள்வரை 4வருஷங்களுக்குமேலே சென்றிராது என்று முன்னர்க்காட்டப்பட்டது. ஆகவே கோவலன் மரணத்திலிருந்து மணிமேகலைநூலாரம்பத்திற கூறப்பட்டசெய்திகள் வரை 7வருஷங்கட்குமேற்படாதுஎன்றேற்படுகிறது.

சித்திரை மாதத்துச்சிததிலைநக்ஷத்திரத்திலே இந்திரவிழவுஇயற் றுதற்குப் புகார்நகரிலுள் ளோர் ஏகாரிக்கங்கசெய்துகொண்டிருந்த தாக மணிமேகலைமுதற்காதைகூறுகின்றது. இந்திரவிழவாரம்பித்த முதல்நாளன்று மாதவியும்அவள்மகளும்

நடனஞ்செய்தற்குவரவில்லை. நடனம் சாதாரணமாக மாலையில் அல்லதுமுன்னிரவில் நடைபெறும்.
அன்றுவாராமைபற்றி மாதவிநற்றாய்கவன்று உடனேவசந்தமாலையை மாதவியிடத்தனுப்புகிறாள் (மணிII 1-6). இவ்வாறுவசந்தமாலையை யனுப்பியது இந்திரவிழவின்2-ம்நாளாக இருத்தல்வேண்டும். இரண்டாங்காதையினும் ஏழாங்காதையினும் சொல்லப்படுஞ்செய்திகள் ஒரேநாளில்நிகழ்ந்தன. அன்றிரவிலேமணிமேகலையை மணிமேகலா தெய்வம் மணிபல்லவத்திற்குஎடுத்துச்செல்கின்றது. எட்டாங்காதையில் மறுநாளுதயத்தைப்பற்றி (அதாவதுவிழவின்3-ம்நாள்)க் கூறியிருக்கிறது. (VIII 18) அன்றேமணிமேகலை மணிபல்லவத்தின் வளங்களையெல்லாங்கண்டு கோமுகியென்னுங்கொமூரீரிலஞ்சிக்குச் சென்று ஆபுத்திரனது அக்ஷயபாத்திரம்பெற்று (காதைIX,X&XI) அன்றிரவிலேயே தனதுதாயிடத்துத்திரும்பிவருகிறாள். அன்று விசாகநக்ஷத்திரமும்பௌர்ணிமையும்சேர்ந்ததினமென்பது மேலே கூறப்பட்டது.
II-ம்காதையிலிருந்துXIகாதைமுடியவுள்ள சரித கடைச்சங்ககாலம் கூடிய

நிகழ்ச்சியினின்றும், மணிமேகலை தன்தாயைவிட்டு ஒருநாளேபிரிந் திருந்ததாக ஏற்படுகிறது. இதற்கேற்பத்தான் 'இன்றேழ்நாளிலிந் நகர்மருங்கே' (VII23-5) 'இன்றேழ்நா ளிலிடையிருள்யாமத்து' (VII106-8) இவ்விரண்டுவரிகட்கும் 'மிஞ்சினால் 7நாளைக்குள்'என்று யினும் அல்லது 'கொஞ்சநாளைக்குள்'

என்றுயினும் பொருள் கொள் ளுதல்வேண்டும்.
வாரநாட்களைப்பற்றி யான்கூறியதைநோக்கினல்,
இரண்டாவது பொருளேஏற்புடைத்தாமென்றுதோன்றுகிறது.
சித் திரைவிசாகநக்ஷத்திரங்களு க்கிடையில்
இரண்டேநக்ஷத்திரங்களுள் ளன.
சித்திரையில்இந்திரவிழவெடுக்கப்பட்டது. விசாகத்தில்
மணிமேகலைபாத்திரம்பெற்றது. இரண்டுநக்ஷத்திரங்களும்
1முதல் 3நாள்இடைப்பட்டாயினும், அல்லது28முதல்
30நாள்இடைப்பட் டாயினும்வருவனவேயன்றி ஒன்றாகவொன்று
7நாளிடைப்பட்டுவரு தலேமுடியாது. இந்தச்
சோதிடஉண்மையும் 'ஏழுநாள்'என்பதற்கு
யா ன்கொண்டபொ ருளையே
பொருததமுடைத்தெனக்காட்டுகின்றது. இந்திரவிழவு
சித்திரைமாதத்தின்கடையில் நடைபெற்றதெனவைத்
துக்கொள்ளினும், மணிமேகலை பிக்ஷாபாத்திரம்பெற்ற
புத்தரது பிறந்தநாள் வைகாசி3-ம்தேதிக்குப்பின் இருக்கமுடியாது.
இரண்டாம் நூற்றூண்டின்பிற்பகுதியில் கி. பி. 162,
170,181,189,200 இந்தவருஷங்களிலேயே வைகாசிவிசாகம்
முதன்மூன் றுநா ள் களுக்குள்வருகின் றது .
கி.பி.157அல்லது171-வதிலிருந்து ஏழுவருஷங்கட்குட்பட்ட
ஒருவருஷத்தை மேற்குறித்தவருஷங்களினின்றும்
தெரிந்தெடுக்க வேண்டும். கி.பி.162என்றஒருவருஷந்தான்
பொருத்தமுடையதா யிருக்கிறது. இதனேடொத்துச்
சிலப்பதிகாரச்செய்திநிகழ்ந்தகால மாயேற்படுவது கி.பி.157.

சுவாமிக்கண்ணுப்பி ள்ளைய வர் கள்

சிலப்பதிகாரச்செய்திநிகழ்ந்த காலமும் மணிமேகலைச்செய்திநிகழ்ந்தகாலமும் முறையே கி. பி. 756 & 771 என்றுகணிக்கிருப்பது முற்றிலும்பொருந்தாதென் பதை மேலேநிரூபணஞ்செய்தேன். அவர்களதுகொள்கைப்படி சிலப் பதிகாரக்கதைநடந்து 15-வருஷங்கழிந்து மணிமேகலைக்கதை யாரம் பிக்கின்றது. ஆனால் எனதுஆராய்ச்சியினால் 7-வருஷங்களுக்கு மேற்படாதென்றுகாட்டினேன். ஆதலால்இக்காரணத்தாலும் அவர் கள்குறித்தகாலங்கள் பிழையாதல்தேற்றப்படும்.



எனதுமுடிபில்வந்தஇரண்டுவருஷங்களும் அடியார்க்குநல்லார் உரையைநீக்கி, னுட்கூறப்பட்டஜோதிஷநிலைகளுக்கெல்லாம் மிகப்பொருத்தமாயிருக்கின்றன. கி. பி. 157 சித்திரைமாதம் 27-ம் தேதியில் சித்திரைநக்ஷத்திரமும் சூரியோதயத்திற்குப்பின் 27- நாழிகை 49 பலமிருந்தது. இம்மாதத்திற்குமுந்திய பங்குனிக்கடை சி நாளில் சித்திரை நக்ஷத்திரம்சூரியோதயத்திலிருந்தது. ஆகையால் அன்றுகாமவிழவுமுடிந்தது. சித்திரை 27-க்குப்பின் 28-நாள்விழா நிகழ்ந்தது. ஆகையால் அது வைகாசி 24-ல்முடிபெய்தியது. அன்று கொடியிறக்கப்பட்டது. மறுநாள்(வைகாசி 25)நாட்கடலாடுதல்நடை பெற்றது. கோவலனும் மதுரையைநோக்கிப்பிரயாணமானான். அன்று திங்கட்கிழமை, விசாகநக்ஷத்திரம், சூரியோதயத்திற்குப்பின் 42- நாழிகை 21-பலமிருந்தது; சுக்லபக்ஷத்து 14-ம்திதி சூரியோதயத் திற்கு

34-நாழிகை 8-பலத்துக்குப்பின் றொடங்கிற்று. புறப்படுங் காலத்துத்திதியதுவாகையால் சந்திராஸதமனத்துக்குப்பின் சிறிது நேரம் இருட்டிருந்திருக்கவேண்டும். மேலும்மரணயோகம்இருக்க வேண்டுமென்று நூல்கூறவில்லையாயினும், மேற்கூறிய வைகாசி 25-ல் புறப்படுஞ்சமயத்துநக்ஷத்திரமநுஷமாயிருந்தாலும் அந்நாளில்திங் கட்கிழமையும்விசாகநக்ஷத்திரமும் சேர்ந்துவருதலால் மரணயோக மிருக்கிறது. ஆடிமாதம் 29-ம்தே தி வெள்ளிக்கிழமை, அன்றுபரணி சூரியோதயத்திற்குப்பின் 58-நாழிகை 17-பலம் வரையிருந்தது. கிருஷ்ணஷ்டமி சூரியோதயமாய் 47-நாழிகை 38-பலத்துக்குப்பின் றொடங்கிற்று. மதுரைத்தேவிக்கும் கண்ணகிக்கும்நிகழ்ந்தசம்பா ஷணத்தை நள்ளிருளில் (அந்நாள்நடுஇரவுவரைதான்இருட்டுஇருக் கும்) சாத்தனார்கேட்டார். இதற்குஒருமணிநேரத்திற்குப்பின் பரணியும்அஷ்டமியுஞ்சேர் ந்திருந்தசமயத்து(சூரியோதயத்திற்குப்பின் 47-நாழிகை 38-பலத்துக்கும், 58-நாழிகை 17-பலத்துக்கும்இடையிட்டசமயத்தில்)மதுரையெரியுண்டதென்று நாம்ஊகிக்கலாம்.

இனி மணிமேகலைக்கதையையெடுத்துக்கொண்டால் கி. பி. 162 வைகாசிமாதம் முதல் அல்லது இரண்டாந்தேதியில், மணிமேகலை மணிபல்லவத்திற்குச் சென்றிருத்தல்வேண்டும் வைகாசி 1-ல் சூரியோதயமாய் 22-நாழிகை 22-பலத்துக்குப்பின் விசாகநக்ஷத்திரமும் 21-நாழிகை 15-பலத்துக்குப்பின் பௌர்ணிமையுந்தொடங்கி

மறுநா ட்சாயங்காலம் சுமார் 3-மணிவரையிருந்தன. ஆகையால் இரண்டுநாளிலும் விசாகமும்பெ ௗர்ணிமையும் ஒன்று சேர்ந்தன. ஆகவே இந்திரவிழா சித்திரைமாதக்கடைசிநாளிலாயினும் அல்லது அதற்குமுந்தியநாளிலாயினும் ஆரம்பித்திருத்தல்வேண்டும். பிள்ளை யவர்கள் கி. பி. 771-ல் வைகாசி 8-ல் இந்திரவிழாத்தொடங்கிற்றென் றூர்கள் . அப்போ து சித்திரைமாதமாகவுமில்லை. சித்திரைநக்ஷத்திர மும்மில்லை. பௌர்ணிமையுமில்லை. "சித்திரைமாதக்கடைசிக்கடுத் துள்ள பௌர்ணிமைக்குப்பக்கத்தானசனிக்கிழமை'யில் இந்திரவிழ வாரம்பமஎன்று அவர்கள்கொண்டதின்பலன் இதுவேயாம்!

கோவலன்இறந்தது கி பி. 157-ல்அல்லது 171-ல் ஆதல்வேண்டு மென்றும் அவற்றுள் மணிமேகலைக்கதையா ரம்பகாலத்தைநோக்கி கி.பி.157 தான் பொருத்தமுடையதென்பதும் மேலேபெறப்பட் டது. கி. பி. 171ஐ எடுத்துக்கொண்டால் அதனோடொத்தமணிமேகலைக் கதைக்காலமில்லாமையாலே அதுகொள்ளற்பாலதன்று. மேலும் அவ் வருஷத்துச் சித்திரைமாதத்துச்சித்திரைநக்ஷத்திரம் 22-ம்தேதியில் சூரியோதயமாய் 56-நாழிகை 16 பலம் முடிய இருந்தது. விழா 28 நாள்நடந்தமையால் வைகாசி 19-க்குள் முடிந்திருக்கவேண்டும். 20-ம் தேதியில் நாட்கடலாட்டும் பிரயாணமுமிருந்தனவாதல்வேண்டும்.
ஆனால் அன்றுசனிக்கிழமையாதலின் கடனீரா ட்டுநிகழாது.

19-ம் தேதிபுறப்பட்டார்களென்றால் அன்று 14-ம்திதியேயில்லை. 21-லோ பௌர்ணிமை53-நாழிகை 51பலததுக்குவந்துவிடுவதால், புறப்படுஞ் சமயத்து(அதாவது 58, 60-நாழிகைகளுக்கு இடைப்பட்டவைகறை யிருட்டில்) திதிபௌர்ணிமையாய்விடும். ஆகையால் கி. பி. 171 பொருத்தமில்லாமை நன்குணரப்படும். இதுகாறுஞ்செய்தஆராய்ச் சியின்பயனும்க் கோவலனிறந்தது கி. பி. 157 என்பதும், கண்ணகிக் குக்கோயிலெடுப்பித்துவிழ வியற்றியது கி. பி 160 என்பதும், மணி மேகலை மணிபல்லவத்திற்குமுதன்முதலாகச்சென்றது கி. பி. 162 என்பதும் துணியப்பட்டன. இதனால் கஜபாகுவின் (I) காலத்தைப் ப ற் றி

மு ந்தியநூலாகியதீபவ ம்சம்சொல்வதுதா ன் சரியென்றும், மஹாவம்சங்கொடுக்குங்காலம்பிழையென்றும் உ ண ரு த ல் கூ டு ம். கி. பி 154-முதல் 1 76 முடிய, கஜபாகுஇருந்தவனுவன், கண்ணகி பிர திஷ்டைகாலத்தில் செங்குட்டுவனுக்கு 50-வயதாயிருந்ததென்று, [illegible] சேர்தழீஇ 'தின்னல்யாண்டுடையைத்திரட்டிசென்றதற்பின்னும்'என்ற மாடலன் மொழிகளால்(சிலப். XXVIII. 1 29—30) உணரப்படும் ஆகை யால் செங்குட்டுவனதுஜனனகாலம் 160—50=110 கி. பி. அவன் 55 வருஷம்வீற்றிருந்தானெனப்பதிற்றுப்பத்து 5-ம்பத்துக் கூறும். அவன் 20-வயதிற்பட்டமெய்தினவனுயின் அவனது இராஜ்யகாலம் 130-முதல் 185-வரைஎன்றேற்படும். சிலப்பதிகார இறுதிக்கட்டுரை யில் நெடுஞ்செழியன் செங்குட்டுவன்காலத்தவனுகச்சொல்லப்படுகி றான். கோவலனைக்கொலைசெய்வித்தபாண்டியன் இவனேயாவன். இவ

னும் கி. பி. 157-ல் இறந்திருக்கவேண்டும்
இவன்மகன்வெற்றிவேற் செழியன்
தனதுநாட்டிலும்கண்ணகியைப்பிரதிஷ்டித்து வழிபாடியற்றினன். செங்குட்டுவன்காலத்தவன்சோழன்பெருங்கிள்ளி (சிலப். உரைபெறுகட்டுரை).
சிலப்பதிகார நூலாசிரியராகியஇளங்கோவடிகள் செங்குட்டுவனதுசகோதரர். அந்நூலுள் நிகழ்ந்தனவாகக்கூறியிருப்பனவற்றை அவைகளைநேரிற்பார்த்தசாத்தனரிடமிருந்து கேட்டுணர்ந்தார். இச்சாத்தனர்தாம் மணிமேகலையாசிரியர். இவர் நன் மாறனைப்(வெற்றிவேற்செழியனதுமறுபெயர்)புறம் 59-ல் புகழ்ந்திருக்கிறார். மணிமேகலைநூலிற்கூறப்பட்டசரிதம் சிலப்பதிகாரச்சரித்திற்குப்பின்நிகழ்ந்தபோதிலும் சிலப்பதிகாரத்துக்குமுந்தியநூல் மணிமேகலை. ஏனெனின், இளங்கோவடிகள் சிலப்பதிகாரமியற்றி முடிந்தவுடன், மணிமேகலை துறவினையும் பாடுதற்குவிருப்பமுள ரென்றுசாத்தனரிடஞ்சொல்ல அதற்குச்சாத்தனர் தாம் முன்னரே அதனைஇயற்றிவிட்டதாய்ச்சொல்லுதலின், ஒருவர்முன்னர்மற்றவர் அரங்கேற்றினர். (சில ப. பதிகம்–87—9, மணி. பதிகம்–95—8). சாத்தனர் கி. பி. 157-ல் மதுரையெரியுண்டதைநேரிற்பார்த்தவராகலின், அவரும்இளங்கோவடிகளும் கி. பி. 200-க்குமுன்மரணமடைந்திருக்கலாமென்றுகருதுதல் தவறாகாது.

சிலப்பதிகாரத்தில் XXI-ப்காதையில்வரி3-4ல், திருக்குறளிலிருந்து 'இன்னாசெய்யாமை'யதிகாரத்து 9-ம்செய்யுள் எடுத்தமைக்கப்பட்டிருக்கிறது. மணிமேகலையில்

யேயிடைப்பெய்துவள் ளுவரையுங்குறிக்கின்றார்.'இதேக்குறளைச் சிலப்பதிகாரத்துக்கட்டுரைகாதை முடி வுரைவெண்பாவில் எடுத்தா ளப்புட்டிருப்பதையும் காண்க. ஆதலால் இளங்கோவடிகட்கும், கடைச்சங்கத்துக் கூலச்

சாத்தனாருக்கும்முன்னிருந்தவர் வள்ளுவரென்பதும் கி.பி.150க்குப் பின் இருந்தாரென்றல்பொருந்தாதென்பதும் பெறப்படும்.

இனிக் கடைச்சங்கந்தொடங்கியகாலத்தைச் சற்றுக்கவனிப் போம். இடைச்சங்கத்திறுதியில் பாண்டியர் தலைநகராகியகபாடபு ரம் கடல்கொள்ளப்பட்டதென்றும்,அதனால் அக்காலத்திருந்தமுடத் திருமாறன் மதுரையைத்தலைநகராக்கி அங்கேகடைச்சங்கம் நிறுவினு னென்றும் களவியலுரைகூறுகின்றது. அவ்வுரையிற்கூறப்படுவன முழுவதையும் அங்கீகாரஞ்செய்தற்கு ஏலாதெனினும் மேற்குறித்த கடல்கோட்செய்தியினை ஐயமின்றி யேற்றுக்கொள்ளலாமென்று தோன்றுகிறது. அதற்குச் சங்கநூலாதாரமுமிருக்கிறது. மேலேவரு வனவற்றாற் பாண்டியநாட்டிற்சிறிதுபா கம ரயினுங்கடலாற்கொள்ளப் பட்டதென்பதுதெளிவாகின்றது.

"மலிதிரையூர்ந்துதன்மண்கடல்வெளவலின்
மெலிவின்றிமேற்சென்றுமேவார்நாடிடம்படப்

புலியொடுவின்னீக்கிப்புகழ்பொறித்தகிளர்கெண்டை
வலியினுன்வணக்கிய வாடாச்சீர்த்தென்னவன்''

(கலித்தொகை-முல்லைக்கலி.)

"வடிவேலெறிந்தவான்பகைபொறுது
பஃறுளியாற்றுடன்பன்மலையடுக்கத்துக்
குமரிக்கோடுங்கொடுங்கடல்கொள்ள''

(சிலப்-காடுகாண்காதை)

கி.மு.2387-ல்இலங்கை இந்தியாவிலிருந்து கடலாற்பிரிக்கப்பட்டதென்று இலங்கைச்சரித்திரங்கள்கூறுகின்றன. சங்கநூல்களிற்கூறப்படுஞ்செய்திகள், இந்தியாவும்இலங்கையும்பிரிந்து வெகுகாலத்திற்கப்புறம்நிகழ்ந்தனவாகஅறியப்படுதலாயினும், தலைச்சங்கம்ஒன்றிருந்ததுண்மையாயின், அதன்காலங்கூடப் பாரதகாலத்தை (கி.மு.1287 Shama Sastri's Gavam Ayamamahabharata Asramavasika-parva)ஒட்டியிருந்தமையாலும்,தமிழ்நூலுரைகளிற்கூறப்படுங்கடல்கோள் இதுவன்று. புத்தருக்கு39வருஷங்கட்குப்பின்னிருந்த(அதாவது450கி.மு)பாண்டுவாஸாவின்காலத்தில்கன்னியாகுமரியையடுத்து இலங்கையின்தென்மேற்குப்பாகத்தில் வேறொருகடல்கோள்கூறப்பட்டுள்ளது (E. Tennan't Ceylon Vol. I & 7 fn). ஆனல்இக்கடல்கோளைப்பற்றி மஹாவம்சம்ஒன்றுங்கூறவில்லை. இதுநிகழ்ந்தது

உண்மையெனின் இவ்வளவுமுக்கியமான ஒருவிஷயத்தை
தவறுமோஎன்று ஆசங்கையுண்டாகின்றது. அதுஉண்
பினும், தலைச்சங்கத்திறுதியினிகழ்ந்ததாய்க்கூறப்படும்
கக்கருதலாம். திருநான்ஸீன்என்னும்பிக்ஷுவை ஹிம்ஸி
தேவர்களுக்குக்கோபமுண்டாயிற்றென்றும், அதன்பய
கடல்கோளுண்டாயிற்றென்றும, அதுகொழும்புக்குப்ப
யாணியென்னுமாகாண முழுவதையும் அமிழ்த்திவிட்
இது நிகழ்ந்தது தேவாநாம்பிரியதிஸ்ஸாவின் பின்வந்த உ
பேரனை திஸ்ஸாவின்காலத்திலென்றும் இலங்கைச்சரிதா
கப்படுகின்றன, பெரியதொருமாகாணமுழுவதையும்
இக்கடல்கோள் பாண்டியநாட்டிலும்ஒருபகுதியை அமிழ்
மென்பது மிகவும்பொருத்தமே. இராஜாவளியிலும் (I
மஹாவம்சத்திலும் (XXII) இக்கடல்கோள் கூறப்பட்டி
கையால் இதனை உண்மையென்றேகொள்ளுதல்பொருந்து
புத்தருக்கு276-வருஷங்களுககுப்பின் 286-வருஷமுடி
யில்ஆட்சிசெய்தான். அதாவது கி.மு.213-203 உத்தியா
காலத்துநிகழ்ந்ததாகக்கடல்கோள்கூறப்பட்டமையால் கி.
சமீபத்தில்உண்டாயிருக்கலாமென்று தோன்றுகிறது.
பியத்திற்குப்பாயிரம்உரைத்த பனம்பாரனர், அருறா
நிறைந்ததொல்காப்பியம்' என்றும், அது'நிலந்தருதிருவிற்

வையத்து' அரங்கேற்றப்பெற்றதோர் இலக்கணம்என்று
ருர். கடல்கோள்ஒன்றேதமிழ்நூலிற் கூறப்படுவதாயின,

சங்ககாலத்திறுதியில் நிலந்தருதிருவிற்பாண்டியன்காலத்
தாதல்வேண்டும். களவியலுரையும்முடத்திருமாறன்கால
தாகக்கூறும், ஆதலின்,நிலந்தருதிருவிற்பாண்டியனும்,இ

மாறனும்ஒருவனேபோலும் (Sen Tamil III 271-83; 38; 465-74). அங்ஙனமாயின தொல்காப்பியம் கி.மு.200க்கு இற்றோன்றியதென்றேற்படும். ஆகவே கடைச்சங்ககாலம் முதல் கி.பி.200வரை எனப் பெறப்பட்டது.

இவ்வியாஸத்தைத் தமிழில்எழுதிமுடித்தற்கு எ S. வையாபுரிப்பிள்ளையவர்கள்புரிந்த உதவி ஒருநாளும் ம தன்று. இதிற் சொற்பிழைகள் அநேகம்இருத்தல் கூடும்; எனக்குரியவையேயன்றிஎன் நண்பருக்குரியனவல்ல. குறளி தயவுசெய்துபொறுத்தருளுமாறு செந்தமிழபிமானிகளை தமைக் ள் வேண்டுகின்றேன். ளை (55-

கே. ஜி. சங்கரைர் குறளைச் 7டுக்தா ட்டும,

---

ஆ.

ராசசிறம்...

# திருநெல்வாயிலரத்துறை

என்று வழங்கும்

# திருவரத்துறைப்புராண ம.

---




உ

திருச்சிற்றம்பலம்.

## திருநெல்வாயிலரத்துறை

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

பண் பியந்தைக் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச் சி
ந்தைசெய்பவர்க்கல்லால்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (க)

சூழ்வார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான் சீருஞ்செ
ல்வமுமேத்தாச்சித்தர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே

லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறைபடிகடம்மருளே. (உ)

பிணிகலந்தபுன் சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப் பணிகலந்துசெய்யாதபாவிகடொழுச்செல்வதன்றுன் மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ங)

துன்னவாடையொன்றுடுத்துத்தூயவெண்ணீற்றினராகி யுன்னிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றாற்
பொன்னுமாமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ச) ெ

வருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றுன்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ரு)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றாற்
குரவநீடியசோலைக்குளிர்புனனிவாமல்குகரைமே
லரவமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (சு) உ

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம். நீலமாமணிமிடற்று நீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே.

(எ) செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்

கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே.
(அ) நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றான் மணங்கமழ்ந்
துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே.
(கூ) சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே
(கய) கறையினூர்பொழில்சூழ்ந்தகாழிஞானசம்பந்
னறையுமபூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தர்தம்விணைபோய்ப்
பறையுமையுறவில்லைப்பாட்டிவைபத்தும்வல்லார்க்கே.
(கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்

திருவரத்துறை திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
வுடலுளானையொப்பாரியலாதவெம்
மடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாந்தொழுவதே.
(க)

கரும்பொப்பானைக்கரும்பினிற்கட்டியை
விரும்பொப்பானைவிண்ணோருமறிகிலா



வரும்பொப்பானையரத்துறைமேவிய
அரும்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௨)
ஏறொப்பானையெல்லாவுயிர்க்குமிறை
வேறொப்பானைவிண்ணோருமறிகிலா
ஆறொப்பானையரத்துறைமேவிய
ஊறொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௩)
பரப்பொப்பானைப்பகலிருணன்னிலா
விரப்பொப்பானையிளமதிசூடிய
வரப்பொப்பானையரத்துறைமேவிய
சுரப்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௪)
நெய்யொப்பானைநெய்யிற்சுடர்போல்வதோர்
மெய்யொப்பானைவிண்ணோருமறிகிலா
ஐயொப்பானையரத்துறைமேவிய
கையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௫)
நிதியொப்பானைநிதியிற்கிழவனை
விதியொப்பானைவிண்ணோருமறிகிலா
நதியொப்பானையரத்துறைமேவிய
கதியொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௬)
புனலொப்பானைப்பொருந்தலர்தம்மையே

மினலொப்பானை விண்ணோருமறிகிலா
ரனலொப்பானை யரத்துறைமேவிய
கனலொப்பானைக் கண்டீர்நாந்தொழுவதே. (எ)

பொன்னொப்பானைப் பொன்னிற்சுடர்போல்வதோர்
மின்னொப்பானை விண்ணோருமறிகிலா
ரன்னொப்பானை யரத்துறைமேவிய
தன்னொப்பானைக் கண்டீர்நாந்தொழுவதே. (அ)

காழியானைக் கனவிடையூருமெய்
வாழியானை வல்லோருமென்றின்னவ
ராழியான்பிரமற்குமரத்துறை
யூழியானைக் கண்டீர்நாந்தொழுவதே. (௯)

## சுந்தரமூர்த்திசுவாமிகள்தேவாரம்.

கலையொப்பானைக் கற்றார்க்கோரமுதினை
மலையொப்பானை மணிமுடியூன்றிய
வலையொப்பானை யரத்துறைமேவிய
நிலையொப்பானைக் கண்டீர்நாந்தொழுவதே.
(௧௦)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திசுவாமிகள்

பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங் கதிர் மாமணியுங்
கலந்துந்தி வருநிவவின் கரைமே,

னெல்வாயிலரத்துறைநீடுறையுங்நிலவெண்மதிசூடியநின்ம
லனே,
நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்த ரிறந்தாரெ
ன்றுநானிலத்திற், சொல்லாய்க்கழிகின்றதறிந்தடியேன்
றொடர்ந் தேனுய்யப்போவதொர்சூழல்சொல்லே.
(க)

கழிமாமிளகும் மிகுவன் மரமு
மிகவுந்திரு நிவின்கரை மே,
னெறிவார்குழலாரவர்காணநடஞ்செய்நெல்வா யி லரத்துறை
நின்மலனே,
வழிதேநிலையாதவிம்மண்ணுலகின்ன ரனு கவ்குத்த
னைநா னிலேயேன்,
பொ றிவா யிலி வையை ந்திணையும்மவியப்பொரு து
ன்னடியேயு கு ஞ் சூழ ல் சொ ல் லே.
(உ)

புற்றாடரவமரையார்த் து க ந்தா ய்புனிதா பொ ரு
வெள்விடை யூர்தியனே,
யெற்றேயொருகண்ணிலனின்னையல்லாநெல்வா யில
ரத்துறைநின்மலனே,
மற்றேலெ ருபற்றிலனெம்பெருமான்வண்
டார்கு ழ லா ண்மங்கை ப ங்கினனே,
யற்றார்பிறவிக்கடனீந்தியே றி
யடியேனுய்ய ப்போவதெ ார்சூழ ல்சொ ல்லே.

(௬)
கோடியர்கோங்கலர்வேங்கையலர்மிகவுந்திவருந்நிவவின்க ரை மே,
னீடியர்சோலைநெல்வாயிலரத்துறைநின் பலனேநினைவார்மனத்தா,
யோடுபுனற்கரையாமிளமையுறங்கிவிழித்தாலொக்குமிப்பிறவி,
வாடியிருந்துவருந்தல்செய்யாதடியேனுய்யப்போவதோர் சூழல்சொல்லே.
(௭)
உலவுமுலகிற்றலைகற்போழியவுயர்வோடிழியுநிவவின்கரைமே
னிலவுமயிலாரவர்தாம்பயிலுநெல்வாயிலரத்துறைநின்மலனே

சுந்தரமூர்த்திசுவாமிகள்தேவாரம்.

௫

புலனைந்துமயங்கியகங்குழையப்பொருவேலோர்நமன்றமர்தாக்கி யாவலமவாநமைப்பெயர்வதன்முன்னடியே
னுய்யப்போவதோர் சூழல்சொல்லே.
(௬) ஏலம்மிலவங்கமெழிற்கனரமிகவுந்திவருந்நிவவின்கரைமே னீலமமலர்ப்பொய்கையிலன்னமலிநெலவாயிலரத்துறையாயொரு நெல்,
வாலூன்றவருந்தும்முடம்பிதனைமகிழாதழகாவலந்தேனினியா, லைனிழலிலமர்நாயமராவடியேனுய்யப்போவதோர் சூழல்சொல்லே,

சிகரம்முசத்திற்பிரளாரகிலும்மிகவுந்திவருந்நிவவின்கரைமே
னிகரின்மையிலா ரவர்தாம்பயிலுநெல்வா யிலரத்துறைநின்மலனே
மகரக்குழை பாய்மணக்கோலமதேபிணக்கோ காலமதாம்பிறவியிது
தா, னகரமுதலினெழுத்தாகிநின்றபடியே னுய்யப்போவ
தொ ர்சூழல்சொல்லே.

(எ)

திண்டேர்நெடுவீதி யிலங்கை யர்கோன் றிரடோ ளிருபஃது
நெ ரித்தருளி,ெஞண்டாடுநெடுவயல்சூழ்புறவினெல்வா
யிலரத்துறை நின்மலனே,
பண்டேமிகநான்செய்தபாக்கியத்தாற் பரஞ்சோதி
நின்னாமம்பயிலப்பெற்றே,
னண்டாவமரர்க்கமரர்பெருமா னடி
யேனுய்யப்போ வதொ ர் சூழ ல்சொலலே.

(அ)

மாணாவுரு
வாகியொர்மண்ணஃ ந்தான்மலர்மேலயன்றேடியு ங்
காண்ட ரியாய்,
நீணீண்முடிவானவர்வந்திறைஞ் சுநெல்வாயிலரத்
துறைநி ன்மலனே,
வா ணுர் நு த ல ா ர் வலைப் ப ட் ட டி யே ன் பலவின்
கனியீநதது போலவதன்முன்,
ஆணோடுபெண் ணுமுருவாகிநின்ற
யடியே பனுய்யப்போவதொர்சூழலசொல்லே.

(கூ)

நீருருவெ நடுவயல்சூழ்

[றவினெல் வாயிலரத் துறைநின்மலனைத்

தேரூர் நெடுவீதிநன்மாடமலிதென் னூவல்[கோ

னடித்தொண்டுப ன்னி,

யாரூரனுரைத்தன நற்றமிழின்மிகுமாலையோர்பத்திவைக

ற்றுவல்லார் ,

காரூர் களிவண்டறையானைமன்னரவராகியொர்வின்

முழுதாள் பவரே.

(கo)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ அருணகிரிநாதர்

## திருவாய்மலர்ந்தருளிய

# திருப்புகழ்.

## திருவரத்துறை.

கறுவிமைக்கணிட்டினிதழைத்தியற்
கவிசொலிச்சிரித்-துறவாடி

களவுவித்தையிட்டுளமுருக்கிமுற்
கருதிவைத்தவைப்-பவைசேரத்

தறுகணிற்பறித்திருகழுத்துறத்
தழுவிநெக்குநெக்-குயிர்சோர

சயனமெத்தையிற்செயலழிக்குமித்
தருணிகட்ககப்-படலாமோ
பிறவியைத்தணித்தருளுநிட்களப்
பிரமசிற்சுகக்-கடல்மூழ்கும்
பெருமுனிக்கிராட்பரவுசெப்பதிப்
ப்ரபலசொச்சையிற்-சதுர்வேதச்
சிறுவநிற்கருட்கவிகைநிதிலச்
சிவிகையைக்கொடுத்-தருளீசன்
செகதலத்தினிற்புகழ்படைத்தமெய்த்
திருவரத்துறைப்பெருமாளே

உ

## திருமாந்துறை

ஆங்குடல்வளைந்துநீங்குபல்நெகிழ்ந்து
ஆய்ஞ்சுதளர்சிந்தை-தடுமாறி
ஆர்ந்துளகடன்கள்வாங்கவுமறிந்து
ஆண்டுபலசென்று-கிடையோடே
ஊங்கிருமல்வந்துவீங்குகுடல்நொந்து
வோய்ந்துணர்வழிந்து-வுயிர்போமுன்
ஓங்குமயில்வந்துசேண்பெறஇசைந்து
வூன்றியபதங்கள்-தருவாயே
வேங்கையுமுயர்ந்ததீம்புனமிருந்த



வேங்கிழையினின்ப மணவாளா

வேண்டுமவர்தங்கள் பூண்டபதமிஞ்ச
வேண்டியபதங்கள்-புரிவோனே
மாங்கனியுடைந்ததேங்கவயல்வந்து
மாண்புநெல்விளைந்த வளநாடா
மாநகர்தவரும்பர்கோன்பரவிநின்ற
மாந்துறையமர்ந்த-பெருமானே

---

வாலிகண்டபுரத்தைத துதித்து இத்தலத்தைத் துதித்தலால்
இப்புராணத்திற்கூறிய திருமாந்துறையையேயாம்.
இத்தலத்தை சிவக்ஷேத்திரவிளக்கமுதலியவற்றில் திரு மாந்துறையென்றும் வழங்குகின்றது.

---

## ஆக்சேடன்றுதி.

ஐந்துளா னைந்துளா னைந்துளா னெனவைந்து
வாயினு மறைந்தனன், வந்துமேன் வந்துமேன் வந்துளே
னெனவைந் துருவமாய்வந்தான், மூர்த்தியேபூசனைக்குரியதே
வனேமுனுங்காண்பதெவ்வாறெனச், சிந்தையே யுற்றன
னொருவராயவர்வரச் சேடனுமண்மிசைப் படிந்தான்.
(க) திபாகமன்னனு மருணைதன்னுதனுஞ் சம்புத்
தாகமுற்றதோரீசனும்வாயுவின் றலத்துளோன்றுனு
மேகமுற்றவராகபத்தவருடன் கூடியேயெழிலா
யாகமுற்றொருவராயினாரத்துறை லிங்கமூர்த்தியுமே.

## வால்மீகன்றுதி.

வெள்ளைகொண்டிடும் கைலையும் வெண்மதியவனு

வெள்ளைகொண்டிடும் ரிஷபமும் வெள்ளுழைதானும்
வெள்ளைகொண்டதில் வேட்டநீ விடுத்திலனுகி
வெள்ளையாகிய வாற்றையும் விரும்பினையரனே.

## குருநமசிவாயரருளிய பரமரகசியமாலை.

---

திருவாத்துறையின் முத்திஞற்சமைத்த சிவிகையும் பந்த ருமெதிரே, வரவருள்கொடுத்துப்புகலி காவலர்க்கு வழங்கிய 'அ/ மூகவுரை.

வண்மையான்மறவே, னருமறைப்பெரியோர் மாதவமுனிவ ரடைந்திடுந் தில்லையம்பதிவாழ், மருவரைக் கயிலைக்கிறைவனை பொன்னம்பலவனே பரமராசியனே.

## ஆதிசங்கராசாரிய சுவாமிகள்| ஸ்லோகம்

ஸிவ்வந வ்யுஷிரி வாஷவந வாஷெ-ஃ
ஸெ-ஃநஹி தீரகவஸிஷ வாரா நாஹரா௦।
ஸிவந ஐஷு மதமராவரிவாவாய-ஃர௦
தீஷ-ஃவாரிநாயஹாராஹரஷாரிதஜாஜ॥

உ

# மூகவுரை.

அகண்டா கார நித்தவியா பக சச்சிதானந்த சொரூபரா கிய சிவபெருமான் ஆன்மாக்கள் வழிபட்டுய்யும்பொருட்டுத் திருவுருக்கொண்டு வீற்றிருக்கும்

சிவஸ்தலங்களுள் நடுநாட்டின் கண் மிகமேன்மையுற்று விளங்குந்தலமாம். இது நிவாநதிக்கரை யிலுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூவ ராலும் திருப்பதிகம் பாடப்பெற்றது. நெல்வாயில் அரத்துறை யென்றும், பிரமகைவர்த்தபுராணத்தில் தேவர்களு க்குச் சொன்ன சிவஸ்தோத்திரமகிமையில் பஞ்சபூதஸம்மிச்ர சிவஸ்தலமென்றும், வடவாலக்ஷேத்திரமென்றும், ஊழிகாசியென்றும், திரு வள்ளுவநாயனார் முதலியோர்களை பெற்ற கலைமகளவதாரமாகிய ஆதியென்பவரது நீசத்துவத்தையொழித்து முத்தியளித்த காரணத்தால் முத்தி க்ஷேத்திரமென்றும் கூறுந் திருநாமங்கள் வாய்க்கப்பெற்றது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அடியார்கள் திருக்கூட்டத்தோடு இவ்வரத்துறையை நோக்கித் தெரிசிக்கவருங்கால் வழிநடந்துவந்த சிரமத்தோடு மாறன்பாடியில் வந்தமர அதனைப்பொறுத திருவரத்துறையப்பர் நெல்வாயிலிலிருக்கின்ற பிராமணர்களுக்கு "ஞானச ம்பந்தனம்பாலணைகின்றான் மான முத்தின் சிவிகை மணிக்குடையான சின்னநம்பாற் கொண் டருங் கலைக்கோனவன்பாலணைந்து கொடுமென அருளிச்செய்து அவ்வாறே ஞானசம்பந்தருக்கும்

புராணிகர் கருத்து. சங்

ர்ாம் மகிழ்ந்தளிக்குமவைகொள்ளலாகுங் கொண்டெய்தல்செ

ய்வாயென அநுக்கிரகித்துமுத்துப்பல்லக்கும் முத்துக்குடையும் முத்துச்சின்னமும் கொடுக்கப்பெற்றது. ஆதித்துறை திருவர் லந்துறை திருமான்றுறை திருஆடுதுறை திருவதிட்டத்துறை திருக்கரத்துறை என்னும் ஆறுதுறைகளுந் தொடர்ந்திருத்தலால் சப்த துறைகளென வழங்கப்பெற்றது. ஆதிசேடன் வால்மீகர் ஆதிசங்கராசாரியர் அருணகிரிநாதர் முதலியோர் வணங் கித்துதித்து அபீஷ்டசித்திகளை யடைந்தது. சேரசோழ பாண் டியர்களா ல் சிவக்குறிதாபித்துப் பூசிக்கப்பெற்றது. விஸ்வாமி த்திரரும் வதிட்டரும் தீர்த்தபுரீசர் முன்பாக வாதஞ்செய்து அனேக அற்புதங்காட்டியது. ஆதிசேடன்பூசித்த காரணத்தா ல்அரவத்துறை யெனவும் பெயர் வழங்குகின்றது.

சப்தரிஷிகளும், விஷ்ணுவும், சனிபகவானும், அங்காரகனும் பூசித்துமேன்மை யடைந்தது. இத்தகைய அனேக ஐதீகங்களோடு விளங்கிய இந்தஸ்தலத்திற்கு சுமார் 400 பா டல்களுள்ள புராணத்தை . திருத்தி அச்சிடவேண்டுமென்ற நோக்கத்தோடு சிலர் வற்புறுத்தியபடியால் ஸ்ரீ ஆனந்தநாயகி சமேத ஸ்ரீவரத்துறைநாதர் திருவருட்டுணைகொண்டு ஒருவாறு பரிசோதித்து வி. அ. சுப்பராயதேசிகர் அவர்கள் பொருளுதவி யால் அச்சிடப்பட்டது.

சிவபத்திமான்கள் இப்புராணத்தையன்போடும் படித்தும் திருவரத்துறையைத் தெரிசித்து அபிமானித்தும் போகமோக்ஷங்களை யெய்துமாறு திருவருளை வழுத்துகின்றோம். சுபம்.

## புராணிகர்கருத்து.

பெரிதுள தாகும் பெருகிய சூதர் பேசுநூற் றலங்களாம திலும், பெரிதுள தாகும் பேருளார்மூவர் பேர்சொலிப் பாடிய தலங்கள், பெரிதுள தாகு நந்தியெம்பெருமான் பேசிடும் பெரியநற்றலங்கள், பெரிததி னுளதோ பேசவே வேறு பெரும்புவி யுலக மூவிடத்தும்.

(க) சாற்றுக்கவி.

சூரியவம்சத் தோனுந் தொன்முசு குந்தனென்பான்
பாரியவாரூர் தன்னிற் றியாகரைப் பதிட்டை செய்தான்
சூரியன் புதல்வ னுகுஞ் சுக்ரீவ நாமத் தோன்றல் பேர்பெற
விளக்கு வித்த வெழிலாடு துறை மற்றீதால். (உ)
ஆதலால் தலத்தின் மேன்மை யாராலுஞ்சொல்லப்போமோ
ஓதியமிருகம் புள்ளா லுண்டான தலங்க ளெல்லாம் தீதுகள்
மிகவகற்றிப் பிறவியைத் தீர்க்குமென்றார் ஆதவன்
மகன்றலத்தா லமைபலனறிவாராரே. (ங)
பதவிக்குப் போகத்தக்க பகர்நெறி யீதென்றீசு
னுதவிய துறையில் வேழ முகந்தநற்புரிகளேழும்
கதவுதலாகக் கொள்ள கைலையான்கருதித் தந்தா னிதுவென

வெண்ணிக் கொண்டேயீசர் தாளடைய நன்றே. (௪)

இன்னதிக் கிச்சை கொண்டே யிருடிகளிவடம் வந்தார்
இன்னதிக் கிச்சைகொண் டேயிசைமணம் வராகன்
செய்தான் இன்னதி தன்னிலாடி லெழிற்கங்கை பலத்திரட்டி
இன்னதிக் கிடேயில்லை யெழிற்றுறை துறையோரேழும்.
(௫)

௳

உடையார்பாளைய ஸமஸ்தான
வித்துவானும்கம்பராமாயணப்பிரசங்கியுமாகிய
வீரசைவக் கனகசபைக் கவிராயரவர்கள்
இயற்றியது.

ஓரோங்கு தெய்வச்சிவக்ஷேத்திரமதனு
ளாரோங்கு செல்வாயரத்துறைக்குப் பாரோங்க
மன்னுபுராணமதை மாணரங்காசாரியென்பா
ருன்னி யுரைத்தாருணர்ந்து.
சம்பந்தர் நன்முத்துத் தண்டிகையைப்பெற்றுவப்பா
னின்பம் பெருகு தமிழ்ப்பதி - னன்பாவல்
ரோரரத்துறைசீர் செப்பினனல்லரங்கா
சாரியவனன்பிற்றழைந்து.

## அகவல்

௧௧

தஞ்சாவூர் கோட்டை மஹாவித்துவான் மக
ா-ா-ா-ஸ்ரீ கணபதியாப்பிள்ளை யவர்கள். இயற்றியது.

